ஸ்ரீ

பொய்கையார்

# இன்னிலை



ஸ்ரீமான்

வ. உ. சிதம்பரம் பிள்ளையவர்கள்

விருத்தி யுரையுடன்

தில்லையாடி

த. வேதியப் பிள்ளையால்

பதிப்பிக்கப் பெற்றது.

சென்னை

இந்தியா அச்சுக்கூடம்.

பிங்கள வருஷம்.

# இன்னிலை

## முன்னுரை

"இன்னிலை" என்னும் இந்நூல் "கீழ்க்கணக்கு" என்னும் பெயரால் தொகுக்கப்பட்டுள்ள நூல்களில் ஒன்று. நூல்கள் "மேற்கணக்கு" எனவும் "கீழ்க் கணக்கு" எனவும் இரு வகைப்படும். "மேற்கணக்கு" என்பது பெரும்பான்மை நான்கிற்கு மேற்பட்ட அடிகளைக்கொண்ட வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா அல்லது மருட்பா பெரும்பான்மை ஐம்பது முதல் ஐந்நூறு வரையில் கொண்டு அறம் பொருள் இன்பங்களை விரித்தும் வீட்டினைச் சுருக்கியும் கூறும் நூல்களின் தொகுதியாம். "கீழ்க்கணக்கு" என்பது பெரும்பான்மை நான்கிற்கு மேற்பட்ட அடிகளைக் கொள்ளாத வெண்பா அல்லது வெண்செந்துறை பெரும்பான்மை ஐம்பதுக்கு மேலும் ஐந்நூற்றுக்குக் கீழும், சிறுபான்மை ஐம்பதுக்குக் கீழும் ஐந்நூற்றுக்கு மேலும் கொண்டு அறம் பொருள் இன்பங்களை விரித்தும் வீட்டினைச் சுருக்கியும் கூறும் நூல்களின் தொகுதியாம். இவை, "மேற்கீழ்க் கணக்கென விதித்தனர் புலவர்" எனவும், "ஐம்பது முதலா ஐந்நூறீறு, ஐவகைப் பாவும் பொருள் நெறி மரபின், தொகுக்கப்படுவது மேற்கணக் காகும்" எனவும், "அடிநிமிர் வில்லாச் செய்யுள் தொகுதி, அறம்

பொருள் இன்பம் அடுக்கி அவ்வகைத், திறம்பட வரு வது கீழ்க்கணக் காகும்" எனவும் வரும் பன்னிருபாட் டியல் சூத்திரங்களால் விளங்கும். மேற்கணக்கு நூல் கள் பல. அவை "பத்துப் பாட்டு" "எட்டுத் தொகை" களில் அடங்கியவை முதலாயின. கீழ்க்கணக்கு நூல் கள் பதினெட்டு. அவை நாலடி நானூறு, நான் மணிக் கடிகை, இனியவைநாற்பது, இன்னா நாற்பது, களவழி நாற்பது, கார் நாற்பது, ஐந்திணை ஐம்பது, ஐந்திணை எழுபது, திணை மொழியைம்பது, திணைமாலை நூற்றைம் பது, திருக்குறள் என்னும் முப்பால், திரிகடுகம், ஆசார க்கோவை, பழமொழி நானூறு, சிறு பஞ்சமூலம், இன் னிலை, முதுமொழிக் காஞ்சி, ஏலாதி. இவையே கீழ்க்கணக் கென்பது "நாலடி நான்மணி நால்நாற்ப தைந்தி ணைமுப், பால்கடுகம் கோவை பழமொழி—மாமூலம், இன்னிலைசொல் காஞ்சியுடன் ஏலாதி என்பவே, கைந் நிலைய வாம்கீழ்க் கணக்கு" என்னும் வெண்பாவால் விளங்கும். இவ்வெண்பாவில் 'நாற்பது' என்பதற்கு முன்னுள்ள "நால்" என்பதனை "ஐந்திணை" என்பத னோடும் கூட்டி, "நால் ஐந்திணை" எனக்கொண்டு அத ற்கு ஐந்திணைகளையும் பற்றிக் கூறும் ஐந்திணையைம்பது முதலிய நான்கு நூல்களு மெனவும், 'சொல்காஞ்சி' என்பதற்கு '(முது) மொழிக் காஞ்சி' எனவும், 'கைந் நிலையவாம்' என்பதற்கு 'ஒழுக்கத்தைப் பற்றிக்கூறும் நூல்களாம்' எனவும் உரைத்துக் கொள்க. இவ்வெண் பாவிலுள்ள அடைமொழிகளின் சுருக்கத்தையும், இவ்

வெண்பாவின் ' கிடக்கையையும், இவ்வெண்பாவின் மோனைகளையும் உற்றுநோக்குவார்க்கு ' இன்னிலை ' என் பதனைக் 'காஞ்சி' என்பதற்கு அடைமொழியாகக் கொள் ளுதலும், ' காஞ்சி யுடன் ஏலாதி யென்பவே' என்பதற் குப் பின்னுள்ள ' கைந்நிலைய ' என்பதிலுள்ள ' கைந் நிலை ' யென்பதனை ஒரு நூலெனக் கொண்டு அதனைப் பதினெண் கீழ்க்கணக்கில் ஒன்றாகக் கொள்ளுதலும், " இன்னிலைசொல் " என்பதற்குப் பதிலாக " மெய்ந் நிலைய " என்ற பாடத்தைக் கொள்ளுதலும், கைந் நிலைய" என்பதற்குப் பதிலாக " நன்னிலையி " வென்ற பாடத்தைக் கொள்ளுதலும் பொருந்துவனவல்ல வென் பது நன்கு விளங்கும்.

இந்நூலை இயற்றியருளினவர், தெய்வ அருளும் செந்தமிழ் ஞானமும் சிறக்கப் பெற்ற ஆழ்வார் பன் னிருவர்களில் ஒருவராகிய பொய்கையார். அவரே இந் நூலை இயற்றினவரென்று கொள்வதற்குரிய காரணம் முதலியவற்றை " இன்னிலை ஆசிரியர் " என்னும் தலைப் பெயருடன் இதன் பின்னர் எழுதியுள்ளேன். இந்நூலைத் தொகுத்தவர் மதுரையாசிரியர். இந்நூலின் கடவுள் வாழ்த்துச் செய்யுளை இயற்றியவர் பாரதம் பாடிய பெருந் தேவனார். இவ்விருவரைப் பற்றியும் ஒரு சில மொழி கள் " இன்னிலை ஆசிரியர் " என்னும் தலைப்பின் கீழ்ச் சேர்த்துள்ளேன். இந்நூல், அறப்பால், பொருட்பால், இன்பப்பால், வீட்டுப்பால் என நான்கு பகுதிகளாக

யும், அவற்றில் வீட்டுப்பால் 'இல்லியல்' 'துறவியல்' என இரண்டு இயல்களாகவும் பகுக்கப்பட்டுள்ளன. அறப்பால் பத்து வெண்பாக்களையும், பொருட்பால் ஒன்பது வெண்பாக்களையும், இன்பப்பால் பன்னிரண்டு வெண்பாக்களையும், வீட்டுப்பால் ('இல்லியல்' எட்டு வெண்பாவும் 'துறவியல்' ஆறு வெண்பாவுமாகப்) பதினான்கு வெண்பாக்களையும் கொண்டுள்ளன. இவற்றில் ஒருசில, இலக்கண இலக்கியப் பயிற்சி இல்லாதவர்களுக்கும் பொருள் விளங்கத்தக்கவையாகவும், வேறொருசில இலக்கண இலக்கியப் பயிற்சியுடையார்க்கு மாத்திரம் பொருள் விளங்கத்தக்கவையாகவும், மற்றவை இலக்கண இலக்கியப் பயிற்சியுடையாரையும் கலக்கத்தக்கவையாகவும் இருக்கின்றன. இவற்றில், பல நேரிசை வெண்பா; சில இன்னிசை வெண்பா; மூன்று சிந்தியல்வெண்பா; இரண்டு பஃறொடை வெண்பா. இந்நூலின் செய்யுள்களில் சில, மிக அருமையான இலக்கணங்களுக்கு இலக்கியங்களாக அமைந்துள்ளன. பலர்பால் படர்க்கைச் சொல் 'செய்யும்' என்னும் வாய்பாட்டுச் சொல்லைப் பயனிலையாகப் பொருந்தி வருவதற்குப் பொருட்பால் இரண்டாவது செய்யுளும் நான்காவது செய்யுளும் இலக்கியமாகும். குற்றியலுகரத்தின்பின் உயிர் வருங்கால் வகர உடம்படுமெய் தோன்றுவதற்கு வீட்டுப்பால் 'துறவியல்' இரண்டாம் செய்யுளும் ஐந்தாம் செய்யுளும் இலக்கியமாகும். வெண்பாக்கள் ஐந்து சீர்களைக் கொண்டு சிறு

பான்மை வருதற்கு அறப்பால் ஏழாம் செய்யுளும், பொருட்பால் ஒன்பதாம் செய்யுளும், இன்பப்பால் ஐந்தாம் செய்யுளும் இலக்கியமாகும். முற்றியலுகர வீற்றுச் சீரைக்கொண்டும் வெண்பா முடியலாமென் பதற்கு இன்பப்பால் எட்டாம் செய்யுள் இலக்கியமா கும். 'உம்' என்பது 'உந்து' என்றாதற்கு இந்நூ லின் கடைசிச் செய்யுள் இலக்கியமாகும். இந்நூலில் ஒரு செய்யுளேனும் சர்வகலாசாலைச் சங்கத்தார் முதலி யோர் இடக்கரென்று கடியும் ஒரு சொல்லையாவது கொண்டிராதது இந்நூலாசிரியரது நாகரிகமேம்பாட் டைக் காட்டுகின்றது. இந்நூலாசிரியர் வீட்டுப்பாலை 'இல்லியல்' என்றும் 'துறவியல்' என்றும் பிரித்திருப் பது, மாந்தர் இல்வாழ்க்கையில் நின்று இல்லறங்களைப் புரிந்தும், இல்வாழ்க்கையைத் துறந்து தவம்புரிந்தும், மெய்யுணர்ந்து வீட்டினை அடையலாமென்பதை ஐய மற நிலைநாட்டுகின்றது.

நாற்பத்தைந்து செய்யுள்களைக் கொண்டு உருவத் தில் சிறிதாகத் தோற்றினும், இந்நூலின் ஒவ்வொரு செய்யுளினும் அடங்கிக்கிடக்கும் பொருள்களின் அரு மையும் பெருமையும் அளவிற் கடங்காதவை. இந்நூ லின் ஒவ்வொரு பாவும் ஒவ்வோர் இரத்தினம் என்று சொல்லத்தக்க பெருமையுடையது. அறப்பாலிலுள்ள "கழிவிரக்கங் கொள்ளார் கதழ்வாளார் வேர்த்துப், பழி முறுகக் கோடார் பயன்பேர்த்—தழிமுதலை, இல்லங்

கொண் டாக்கார் இடும்பைத் தளைதணப்பர், நல்லறனை நாளணிகொள் வார் '' என்னும் செய்யுள், அறத்தினையும் அதன் பயனையும் எவ்வளவு தெளிவாக விளக்குகின்றது? பொருட்பாலிலுள்ள " மெய்வலியுஞ் சென்னிலையும் வா ணுளுந் தூவொழுக்கும், மெய்யாவளிக்கும் வெறுக்கையி லார்--வையத்துப், பல்கிளையும் வாடப் பணையணைதோள் சேய்திரங்க, வொல்குயிர்நீத் தாரு நரகு '' என்னும் செய்யுள், பொருளினது சிறப்பையும் பொருளை ஈட்டுத லின் இன்றியமையாமையும் எவ்வளவு நன்ருகக் கூறுகின் றது? அப்பாலிலுள்ள " கால்கலத்தால் சேர்பொருளும் கண்ணற்ருர் தேர்பொருளும், நாலிரண்டால் கூடும் நலப் பொருளும்—கோல்தாங்கிக், கோடும் அரசிற் குரியா மே தொல்புவிக்கீழ், ஆடும் பொருளோ டணைந்து '' என்னும் செய்யுள்போல அரசர்க்குரிய பொருள்க ளனைத்தையும் ஒருங்கு கூறும் வேறு செய்யுள் உண் டோ? இன்பப் பாலிலுள்ள " தூவி நெருஞ்சிக்காய் நீர் மூள்ளி தும்பையலர், காவியன சேறகண் குறுந் தொடியா—ராவிக், கினிய ரிணைசேரா ரீங்கண்மா ஞாலத், தனிமைக் கவரோர் கரி '' என்னும் செய்யுளைப் போல இன்பத்தின் மேம்பாட்டை எடுத்துக்கூறும் வேறு செய்யுளை எங்கேனும் கண்டதுண்டோ? அப்பா லிலுள்ள "காதல் விரிநிலத் தாரா வகைகாணர், சாத னன் றென்ப தகைமையோர்—காதலும், ஆக்கி யளித் தழிக்குங் கந்தழியின் பேருருவே, நோக்கிலரை நோவ தெவன் '' என்னும் செய்யுளைப்போல இன்பத்தின் சிற

ப்பினை எடுத்துக் கூறும் வேறு செய்யுளை யாரேனும் கேட்டதுண்டோ? வீட்டுப்பால் 'இல்லிய' லினுள்ள "நல்வினஞ் சாரல் நயனுணர்தல் பல்லாற்றான், நல்வின மோம்பல் பொறையாளல்—ஒல்லும்வாய், இன்னார்க் கினிய புரிதல் நெறிநிற்றல், நன்றுப்பண் உய்ப்பதோ ராறு" என்னும் செய்யுள் இல்வாழ்வாரது கடமையை யும் அவர் அடையும் பயனையும் எவ்வளவு நன்றாகக் கூறு கின்றது? அப்பாலின் 'துறவிய' லினுள்ள "ஒன்றுண் டே மற்றுடலிற் பற்றி வினையிறுக்கும், பொன்று உணர் வால் விலங்கொறுக்கப் பைம்மறியாத், தன்பால் பெயர்க் குந்து பற்றித் தலைப்பட்டோர், நன்பால் அறிந்தார் துறந்தார் வரனுய்ந்தார், புன்பாலால் சுற்றப் படார்" என்னும் செய்யுள் மெய்ஞ்ஞானத்தையும் அதனு லாம் பயன்களையும் எவ்வளவு தெளிவாகக் கூறுகின் றது? இவ்வாறே, இந்நூலின் ஒவ்வொரு செய்யுளும் ஒப்புயர்வற்ற பெருமையினை யுடையதாயிருக்கின்றது. அதனால், இந்நூலின் செய்யுள்களினது பெருமையை ஆராய்தலை இம்மட்டில் நிறுத்துகின்றேன்.

இந்நூலை நமது தமிழ்த்தொல்லாசிரியர்களில் பலர் எடுத்துத் தமது நூலின்கண்ணே ஆண்டுள்ளார்கள். அவர்களில் நமது தெய்வப்புலமைத் திருவள்ளுவ நாய னார் "முன்னோர் மொழிபொருளே யன்றி அவர்மொழி யும், பொன்னேபோல் போற்றுவம்" என்று இந்நூற் செய்யுள்களில் பலவற்றின் பொருள்களையும் சொற் களையும் எடுத்துத் தமது திருக்குறளின்கண்ணே ஆண்

டிருப்பதை யெண்டுக் காட்டுகின்றேன். இந்நூலின் உரு-ம் செய்யுளிற்கண்ட "அன்னத்தின் பெற்றியரின் என்பெறும் பேறு" என்பதன்றோ "பெண்ணிற் பெருந்தக்க யாவுள" என்னும் குறளடி? இந்நூலின் உசு-ம் செய்யுளிற் கண்ட "தூவி நெருஞ்சிக்காய் நீர்முள்ளி தும் பையலர்" என்பதன் வேறுமொழி யன்றோ "அனிச்சமும் அன்னத்தின் றூவியு மாதர், அடிக்கு நெருஞ்சிப் பழம்" என்னும் திருக்குறள்? இந்நூலின் உஎ-ம் செய்யுளிற்கண்ட "காமம்வீ ழின்பக் கடலாமே" என்பதே யன்றோ "இன்பம் கடல் மற்றுக் காமம்" என்னும் குறளடி? இந்நூலின் உஅ-ம் செய்யுளிற்கண்ட "ஊடிப் புணர்வாரே தாமிசைவர் பல்காலம், ஈடிலதே இன்ப விருந்து" என்பதன் சாரமன்றோ "ஊடுதல் காமத்திற் கின்பம் அதற்கின்பம் கூடி முயங்கப் பெறின்" என்னும் குறள்? இந்நூலின் உகூ-ம் செய்யுளாகிய "தோற்றாரே வெல்வர் துணைமிசையார் கோட்டியானை, யேற்றுக் கழுறெடியார் மிக்காரை யாவரைவர், போற்றளி கூடல் கரி" என்பதன் தொகையன்றோ "ஊடலிற் றோற்றவர் வென்றா ரதுமன்னுங், கூடலிற் காணப் படும்" என்னும் குறள்? இந்நூலின் ௩௰-ம் செய்யுளிற் கண்ட "ஐம்புலத்தோர் நல்குரவோர் ஓம்பி" என்பதன் விரியல்லவோ "தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்கல் தானென்றாங், கைம்புலத்தா றோம்பல் தலை" என்னும் குறளும் "துறந்தார்க்கும் துவ்வாதவர்க்கும் இறந்தார்க்கும், இல்வாழ்வா னென்பான் துணை" என்னும் குற

ளும்? இந்நூலின் ௩௪-ம் செய்யுளிற் கண்ட "கைப்பொருள்வாய் இட்டினும் வாயிடுக்க" என்பதன்றோ "ஆகா றளவிட்டி தாயினும் கேடில்லை, போகா றகலாக் கடை" என்னும் குறள்? இந்நூலின் ௩௯-ம் செய்யுளிற்கண்ட "ஒல்லும்வாய் இன்னார்க் கினிய புரிதல்" என்பதன் விரியன்றோ "இன்னா செய்தார்க்கு மினியவே செய்யாக்கால் என்ன பயத்ததோ சால்பு," என்னும் குறள்? இந்நூலின் ௩௯-ம் செய்யுளிற்கண்ட "நனிகாக்கும் ஒண்மை உற்றப்படுத்தும் பண்போன், பனிநிலத்தின் வித்தாய்ப் பெயரான்" என்பதன் வேறு மொழியன்றோ "உரனென்னுந் தோட்டியான் ஓரைந் தும் காப்பான், வரனென்னும் வைப்பிற்கோர் வித்து" என்னும் குறள்? இந்நூலின் ௬௨-ம் செய்யுளிற்கண்ட "மாசகல வீறு மொளியன்ன நோன்புடையோர், மூசா வியற்கை நிலனுணர்வார்" என்பதன் விரியல்லவோ "சுடச்சுடரும் பொன்போல் ஒளிவிடும் துன்பம், சுடச்சுட நோற்கிற் பவர்க்கு" என்னும் குறளும் "கூற்றம் குதித்தலும் கைகூடும் நோற்றலின், ஆற்றல் தலைப்பட்டவர்க்கு" என்னும் குறளும்? அச்செய்யுளிற் கண்ட "இன்னல் இனிவாயாக் கொள்வார் பிறப்பிறப்பில், துன்னார் அடையும் நிலன்" என்பதன் வேறு மொழியன்றோ "இன்னாமை இன்பம் எனக்கொளின் ஆகும்தன், ஒன்னார் விழையும் சிறப்பு" என்னும் குறள்? இந்நூலின் ௬௩-ம் செய்யுளாகிய "பேராப் பெருநிலன் சேய்த்தே யுடம்பொன்றோ, பேரா ஒருநிலனு நீங்காப்

'பெரும்பொருளை, ஏரா அறிந்துய்யும் போழ்து" என்ப தன் றொகையன்றோ " ஐயத்தின் நீங்கித் தெளிந்தார்க்கு வையத்தின், வானம் நணிய துடைத்து" என்னும் குறள்? இந்நூலின் ௪௪-ம் செய்யுளிற்கண்ட ஐயுணர்வான் ஆய்ந்து அறஞ்சார்பாச் சார்பொறுக்க, நையா நிலைவேண்டுவார்" என்பதன்றோ "சார்புணர்ந்து சார்பு கெடவொழுகின் மற்றழித்துச், சார்தரா சார்தரு நோய்" என்னும் குறள்? இந்நூலின் ௬௫-ம் செய்யுளிற் கண்ட (மெய்ப்பொருளைப்) " பற்றித் தலைப்பட்டோர், நன்பால் அறிந்தார் துறந்தார் வரலுய்ந்தார் " என்பதன் விரியன்றோ "கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவர், மற்றீண்டு வாரா நெறி" என்னும் குறள்? திருக்குறளின் பொருள்களையும் சொற்களையும் இந்நூலாசிரியர் எடுத்துத் தமது நூலின்கண் ஆண்டுள்ளாரென்று கொள்ளலாகாதோ வெனின், ஆகாது. என்னை? இந்நூலாசிரியர்போன்ற தக்க புலவர் திருக்குறளின் பொருள்களையும் சொற்களையும் எடுத்து ஆண்டிருப்பின், இந்நூற் செய்யுள்களது அழகு முதலியவை திருக்குறட் செய்யுள்களது அழகு முதலியவற்றிற்கு மிக மேம்பட்டன வாயிருக்கும்.

இந்நூலைத் தொல்லுரையாசிரியர்களிலும் பலர் எடுத்தாண்டுள்ளார்கள். " உரையாசிரியர்." எனச் சிறப்புப் பெயர் பெற்றவரும், தொல்காப்பியம் மூன்று அதிகாரங்களுக்கும் முதலில் உரையெழுதியவரும், தெய்வத்

தன்மை வாய்ந்த பெரியாரெனப் பல பெரியோரால் புகழப்படுகின்றவருமாகிய இளம்பூரணர் தமது தொல்காப்பியக் 'களவியல்' உ௩-ம் சூத்திரவுரையில் இந்நூல் இன்பப்பாலின் உ-ம் செய்யுளாகிய "துணையென்ப காம விருந்துப்பார் தோமி, லிணைவிழைச்சின் மிக்காகா ராகல்—புணைதழீஇக், கூட்டுங் கடுமிசையான் கட்டியிற் கொண்டற்றால், வேட்டபோழ் தாகு மணி" என்பதை எடுத்தாண்டு, "இப்பாட்டு இத்தன்மைத் தாய் (இன்பம்) துய்த்தல் வேண்டுமென அறவுரை சுட்டி வந்தது" எனவும், 'கற்பியல்' ரு-ம் சூத்திர வுரையில் இந்நூல் வீட்டுப்பால் 'இல்லிய'லின் கூ-ம் செய்யுளாகிய "ஐங்குரவ ரோம்பல் இனனீக்கல் சேர்ந்தோர்க்கும், பைங்கூழ் களைகளைப் பார்த்தளித்தல்—நையுளத்தர்க், குற்ற பரிவீர்த்தல் எண்ணின் கறநெறியில், உற்ற புரிதல் கடன்" என்பதை எடுத்தாண்டு, "இது தலைவன் மனைக்கிழத்திக்குரிய செயல் கூறிப் புரியென்றது" எனவும், 'கற்பியல்' கஉ-ம் சூத்திர வுரையில் இந்நூல் இன்பப்பால் ய-ம் செய்யுளாகிய "தோற்றாரே வெல்வர் துணைமிசையார் கோட்டியானை, யேற்றுக் கழறொடியார் மிக்காரை யாவரைவர், போற்றளி கூடல் கரி" என்பதை எடுத்தாண்டு "இஃது இன்பம் பற்றி வந்தது, தலைமகன் மாட்டு ஒழுகும் திறன் கூறுமாற்றான்" எனவும், அச்சூத்திர வுரையிலேயே இந்நூலின் வீட்டுப்பால் 'இல்லிய'லின் முதற் செய்யுளாகிய "ஒத்த வுரிமையளா வூடற் கினியளாக், குற்ற மொரூஉங் குணத்

தனைக்—கற்றறிஞர்ப், பேணுந் தகையளாக் கொண் கன் குறிப்பறிந்து, நாணுந் தகையளாள் பெண்" என் பதையும் அவ்வியலின் ௬-ம் செய்யுளாகிய "ஐம்புலத் தோர் நல்குரவோ ரோம்பித் தலைப்பட்ட, செம்பாகம் நன்மனையைப் பேணிக்-கடாவுய்த்த, வம்புல் நிலைபேணி யூழ்ப்ப வடுவடார், ஐம்புலமீர்த் தாரிற் றலை" என்பதை யும் எடுத்தாண்டு, இவை "இல்லறத்தமர்ந்து உலகோர் மாட்டு ஒழுகும் திறனைக் கூற வந்தன" எனவும் குறிப் ப்பெழுதியுள்ளார். ஆசிரியர்களிலெல்லாம் பெரியவ ரெனப் புலராலும் புகழ்ப்பெற்ற பேராசிரியர் தமது தொல்காப்பியச் 'செய்யுளியல்' ககரு-ம் சூத்திரவுரை யில் இந்நூலின் அறப்பால் ரு-ம் செய்யுளாகிய "திரை த்த விரிக்கிற் றிரைப்பினு வாய்போல், உரைத்த வுரைய தனைக் கேட்டும்—உரைத்த,பயன்றவா செய்வார் சிலரே தந் நெஞ்சத், தியன்றவா செய்வார் பலர்" என்பதை எடுத்தாண்டுள்ளார். "உச்சிமேற் புலவர்கொள் நச்சினா ர்க்கினியர்" என்னும் உரையாசிரியர் தமது தொல்காப்பி யச் செய்யுளியல் ககரு-ம் சூத்திரவுரையில் இந்நூலின் மேற்கண்ட "திரைத்த" என்னும் தொடக்கத்துச் செய் யுளை எடுத்தாண்டுள்ளார். யாப்பருங்கல விருத்தியுரை காரர் இந்நூலின் பொருட்பால் உ-ம் செய்யுளாகிய "உடைமைபரூ தீட்டல் உறுதுணையாம் யாண்டும், உடை மையரச் சென்றக்கால் ஊரெல்லாம்—சுற்றம், உடை மைக்கோல் இன்றங்குச் சென்றக்காற் சுற்றம், உடைய வரும் வேறு படும்" என்பதை எடுத்தாண்டு "இது

ஆரிடவாசகம்" என்று கூறியுள்ளார். இவ்வாறு தொல்லாசிரியர்களும் தொல்லுரையாசிரியர்களும் இந்நூலினை எடுத்தாண்டிருப்பதே இந்நூலின் மேம்பாட்டைக் காட்டாநிற்கும்.

எனக்குக் கிடைத்த இந்நூலின் ஏட்டுப்பிரதி திருநெல்வேலி ஜில்லா ஆழ்வார்திருநகரியில் மூன்று நூற்றாண்டுகளுக்கு முன்னர் அவதரித்துத் தமிழ் இலக்கிய இலக்கணங்களை முற்றுறக் கற்று "மாறனலங்காரம்" முதலிய சில அரிய நூல்களை இயற்றியருளிய ஸ்ரீமான் இரத்தினக் கவிராயரவர்களால் எழுதப்பட்டுள்ளது. இவ்வேட்டுப் பிரதியின் முதல் ஏட்டில் "ஹரி ஓம் நன்றாக. மதுரையூரசிரியரால் தொகுக்கப்பட்ட இன்னிலை நாற்பத்தைந்து. தேனரு மகிழ்த்தொடையலு மௌலியுந் திருக்கிளர்க் குழைக்காதுங், கானரு மலர்த்திருமுகச் சோதியுங் கயிரவத் துவர்வாயு, மோனமாகிய வடிவமு மார்வமு முத்திரைத் திருக்கையு, ஞானதேசிகன் சரணதா மரையுமெ னயனம்விட் டகலாவேஞ் சீயர் திருவடிகளே சரணம். வயித்தியநாத குரவே நம. திருமேனி ரத்திநக் கவிராயன் எழுதிவரும் இன்னிலை நாற்பத்தைந்து. நன்றாக. குருவே துணை. ஆண்டாள் துணை." என்பவை எழுதப்பட்டுள்ளன. இரண்டாவது ஏட்டின் தொடக்கத்தில் "வேலற்றரீஇ" என்ற தொடக்கத்துச் செய்யுளுக்குமுன் "கடவுள் வாழ்த்து" என்னும் சொற்களும், அதற்குப்பின் "பாரதம் பாடிய பெருந்தேவனார்" என்னும் சொற்களும் எழுதப்பட்

டுள்ளன. பின்பு "நூல்" என்ற சொல்லொடு தொடங்கி இந்நூல் செய்யுள் நாற்பத்தைந்தும் எழு தப்பட்டுள்ளன. பின் "பொய்கையார் பாடிய இன் னிலை முற்றிற்று" என்ற சொற்களும், அவற்றின் பின் "நாலடி நான்மணி" என்று தொடக்கத்து வெண்பாவும், அதன்பின் "தாயபனுவ றலைப்படுவா ரிவ்வுலகி, லுய பயனுணர்வா ரச்சமியார் வெந்தென் றும், போய விழைவியாண வின்பப் புணரியாப், பீய் வின்றி நிற்பே கரி" என்னும் வெண்பாவும் எழுதப்பட் டுள்ளன. இவ்வேட்டுப்பிரதியை எனக்கு அளித்தவர் கள் திருநெல்வேலி ஹிந்துக்கல்லூரித் தமிழ்ப் பண்டிதர் ஸ்ரீமான் த. மு. சொர்ணம் பிள்ளையவர்கள். இவர் களுக்கு இவ்வேட்டுப் பிரதியை வேறு பல தொன்னூ லேட்டுப் பிரதிகளோடு சேர்த்தளித்தவர்கள் திருமே னிக் கவிராயரவர்கள் சந்ததியார்களுக்குத் தலைவராக வும், எனக்கு உறவினராகவும் நண்பராகவும், திருநெல் வேலி ஜில்லா தாலூகா போர்டு மெம்பராகவும் நின்று விளங்கும் ம-ா-ா-ஸ்ரீ அ. மீ. மலையயாப் பிள்ளையவர் கள். இதுகாறும் இந்நூலின் பெயரும், இந்நூல் கீழ்க் கணக்குப் பதினெட்டில் ஒன்றென்பதும் தெரியாதிருந்த நம் தமிழ் நாட்டார்க்கு இந்நூலை அளிப்பதற்குக் காரண கர்த்தர்களாயிருந்த இவ்விருவர்களுக்கும் தமி ழுலகம் நன்றிபாராட்டக் கடன்பட்டுள்ளது.

பிரம்பூர், சென்னை.
பிங்கள ஆடிமீ 9உ
வ. உ. சிதம்பரம் பிள்ளை.

---

# இன்னிலை

## ஆசிரியர்.

இந்நூலினது ஏட்டுப் பிரதியின் முதல் ஏட்டுத் தொடக்கத்தில் "மதுரையாசிரியரால் தொகுக்கப் பட்ட இன்னிலை நாற்பத்தைந்து" என்னும் சொற்க ளும், அம்முதல் ஏட்டின் முடிவில் "திருமேனிக்கவிரா யரெழுதிவரும் இன்னிலை நாற்பத்தைந்து நன்றாக" என்னும் சொற்களும், அவ்வேட்டுப் பிரதியின் கடைசி ஏட்டுமுடிவில் "பொய்கையார் பாடிய இன்னிலை முற் றிற்று" என்னும் சொற்களும் எழுதப்பட்டுள்ளன. இந்நூலின் ஏட்டுப் பிரதியை எழுதிய திருமேனி இரத் தினக்கவிராயரவர்கள் செந்தமிழ்ப்புலமையும் சீரிய ஒழுக்கமும் தெய்வபக்தியும் சிறந்து விளங்கியவர்கள். இந்நூலின் ஏட்டுப் பிரதியை அளித்த ஸ்ரீமான். மலை யையாப் பிள்ளையவர்கள் அக்கவிராயரவர்களின் ஏடு களை யெல்லாம் போற்றி வைத்திருக்கும் அவர்களு டைய சந்ததியார்களின் தலைவராய் விளங்குகின்றவர் கள். பொய்கையார் என்பார் "இன்னிலை" என்னும் நூலை இயற்றிற்றில ரென்றுவது, அந்நூலை வேறு யாரேனும் இயற்றினரென்றுவது நாம் கேள்விப்பட வில்லை. ஆதலால், "இன்னிலை" யென்பது இந்நூலே யென்றும். இந்நூலை இயற்றியவர் பொய்கையாரே

யென்றும் நாம் கொள்ளலாகும். ஆகவே, நாலாயிரப் பிர பந்தத்திலுள்ள "முதற்றிருவந்தாதி" யையும், "களவழி" யையும், புறநானூற்றிலுள்ள "கோதை மார்பிற் கோதையானுங், கோதையைப் புணர்ந்தோர் கோதையானு, மாக்கழி மலர்ந்த நெய்த லானுங், கண்ணு றும்மே கானலந் தொண்டி, யஃதெம் மூரே யவனெம் மிறைவ, னன்னோற் படர்தி யாயி னீயு, மெம்மு முள்ளுமோ முதுவா யிரவல, வமர்மேம் படூஉங் காலைநின், புகழ் மேம் படுநனைக் கண்டன மெனவே.", "நாட னென்கோ வூர னென்கோ, பாடிமிழ் பனிக்கடற் சேர்ப்ப னென்கோ, யாங்ஙன மொழிகோ வோங்குவாட் கோதையைப், புனவர் தட்டை புடைப்பி னயல, திறங்குகதி ரலமரு கழனியும், பிறங்குநீர்ச் சேர்ப்பினும் புள்ளொருங் கெழூமே" என்னும் செய்யுள்க ளிரண்டையும், பன்னிரு பாட்டியலில் "பொய்கையார்" என்னும் பெயரொடு காணப்படும் சூத்திரங்களையும், யாப்பருங்கல விருத்தியுரைகாரர் "பொய்கையார் வாக்கு" என்னும் குறிப்பொடு காட்டியுள்ள தனிச் செய்யுள்களையும், இந்நூலையும் இயற்றியவர் "பொய்கையார்" என்னும் பெயரினரென்பது பெறப்பட்டது.

முதற்றிருவந்தாதியையும் யாப்பருங்கல விருத்தி உதாரணத் தனிச்செய்யுள்களையும் இயற்றிய பொய்கையார் வேறு, களவழிநாற்பதையும் மேற்கூறிய புறநானூற்றின் செய்யுள்களிரண்டையும் இயற்றிய பொய்கையார் வேறு என்றும், அவ்விருவரும் வெவ்வேறு காலத்

தினர் என்றும் ஒரு சாரார் கூறுகின்றனர். "முதற்றிருவந்தாதி" முதலிய எல்லாவற்றையும் இயற்றியவர் "பொய்கையார்" என்னும் பெயரைக் கொண்ட புலவர் ஒருவரே யென்று மற்றொரு சாரார் கூறுகின்றனர். பிந்திய சாரார் கூற்றிற்கு ஆதாரமாக நிற்பது, நாலைந்து நூற்றாண்டுகளுக்கு முந்தித் தோன்றிய யாப்பருங்கல விருத்தியில் முதற்றிருவந்தாதிச் செய்யுளிரண்டோடு குறித்துள்ள தனிச்செய்யுள் சிலவற்றைப் "பொய்கையார்வாக்கு" என்று குறிப்பிட்டிருப்பதே. அவ்வுரைகாரர் களவழிச் செய்யுள்களையாவது மேற்கூறிய புறநானூற்றுச் செய்யுள்களையாவது உதாரணமாக எடுத்தாளவுமில்லை; அவற்றைப்பற்றி ஒன்றும் கூறவுமில்லை. ஆதலால், அவ்வுரைகாரரது குறிப்பிலிருந்து கொள்ளத் தக்கதெல்லாம் அவர் "பொய்கையார் வாக்கு" என்று எடுத்தாண்டுள்ள தனிச்செய்யுள்கள் சில "பொய்கையார்" என்பவரால் பாடப்பட்டனவென்று அவர் கருதினரென்ப தொன்றே. இத் தனிச்செய்யுள் களையும், முதற்றிருவந்தாதிச் செய்யுள்களையும், மேற்கூறிய புறநானூற்றுச் செய்யுளிரண்டையும், களவழிச் செய்யுள்களையும், பாடிய பொய்கையார் ஒருவரேயென்று அவர் கருதியதாகக் கொள்ளுதல் மிகையேயாகும். முதற்றிருவந்தாதியைப் பாடிய பொய்கையார் தொண்டை நாட்டுக் காஞ்சி நகரத்தவர். அதற்குச் சான்று சற்றேறக்குறைய ஆயிரம் வருடங்களுக்கு முன்னர் முதற்றிருவந்தாதிக்கு முதலியாண்டான் அருளிச்

செய்த "கைதைசேர் பூம்பொழில்சூழ் கச்சிநகர் வந்து தித்த, பொய்கைப் பிரான்கவிஞர் போரேறு—வையத், தடியவர்கள் வாழ அருந்தமிழ்ந் தாதி, படிவிளங்கச் செய் தான் பரிந்து" என்னும் தனியன். புறநானூற்றுச் செய் யுளிரண்டையும் பாடிய பொய்கையார் காஞ்சிபுரத்திற்கு நானூறு மைல் தூரத்திலுள்ள மலைநாட்டுத் தொண்டி நகரத்தவர். அதற்குச் சான்று அவர் பாடிய புறநானூற் றுச் செய்யுளொன்றின் "கானலம் தொண்டி யஃதெம் மூரே" என்னும் சொற்கள். காஞ்சி நகரத்துப் பொய் கையார் ஸ்ரீவிஷ்ணுபிரான் ஒருவருக்கே ஆள். அதற் குச் சான்று முதற்றிருவந்தாதியின் "அடுத்த கடும் பகைஞர்க் காற்றேனென் றோடிப், படுத்த பெரும்பாழி சூழ்ந்த—விடத்தரவை, வல்லாளன் கைகொடுத்த மா மேனி மாயவனுக், கல்லது மாவரோ ஆள்" என்னும் செய்யுள். தொண்டி நகரத்துப் பொய்கையார் மலை நாட்டரசனுக்கே ஆள். அதற்குச் சான்று புறநானூற் றுக் "கோதைமார்பின்" என்னும் தொடக்கத்துச் செய்யுளிலுள்ள "அவனெம் மிறைவன்" என் னும் சொற்கள். முதற்றிருவந்தாதியைப் பாடிய பொய்கையார் ஸ்ரீ விஷ்ணு ஸ்தலங்களில் தொண் டைநாட்டுக் காஞ்சி வெஃகாவையும், அதனை யடு த்துள்ள நடுநாட்டுத் திருக்கோவலூரையும், வட நாட்டுத் திருவேங்கடத்தையும், சோழநாட்டுத் திரு வரங்கத்தையும் திருவிண்ணகரையும் பாடியுள்ளார். இதனால் இவர் காஞ்சியிலே பிறந்து, காஞ்சியிலே வதி

ந்து, காஞ்சியின் சமீபத்திலுள்ள இடங்களில் மாத்திரம் சஞ்சரித்திருந்தவரென்பது தெரிகின்றது. அவர் மலை நாட்டிலுள்ள தொண்டி நகரில் வதிந்திருந்தனராயின், அத்தொண்டி நகரை அடுத்துள்ளவையும் தொன்று தொட்டுப் பிரசித்தமாக விளங்குபவையுமான திருப்புலியூர், திருவனந்தபுரம் முதலிய மலைநாட்டு விஷ்ணு ஸ்தலங்களில் ஒன்றையேனும் அவர் பாடாமலிருந்திருக்கமாட்டார். ஆதலால், அவர் தொண்டி நகரில் வதிந்தாரென்பது தவறு. முதற்றிருவந்தாதிச் செய்யுள்களின் இனிமையையும் களவழிச் செய்யுள்களின் துனிமையையும் நோக்கும் எவரும் அவ்விரண்டு நூல்களும் ஒருவரால் பாடப்பட்டவை யென்று கூறுர். முதற்றிருவந்தாதிச் செய்யுள்களில் சில, மிக அரிய வெண்பா இலக்கண விதிகள் சிலவற்றிற்கு ஆதாரமாயிருக்கின்றன. களவழிச் செய்யுள்களனைத்தும் வெண்பா இலக்கண விதிகளைப் பின்பற்றி பாடப்பட்டவையாகவே யிருக்கின்றன. முதற்றிருவந்தாதிச் செய்யுள்களிற் சிலவற்றில் இப்பொழுது பழக்கத்திலில்லாத நன்பு, புலரி, குரா, திருவன், மரிதல், எனும் முதலிய தமிழ்ச்சொற்கள் பல காணப்படுகின்றன. களவழிச் செய்யுள்களில் அத்தகைய சொல் ஒன்றேனும் காணப்படவில்லை. இவ்விரண்டு நூல்களிலுமுள்ள இவ்விரண்டு வேற்றுமைகளும் முந்திய நூல் முற்பட்ட காலத்தது தென்பதையும், பிந்திய நூல் பிற்பட்ட காலத்ததென்பதையும் காட்டாநிற்கும். களவழிச் செய்யுள்கள், அரசர்களை விஷ்ணுவின் அம்சத்தவ

ராகக் கூறும் நெறிப்படியே சோழனைத் திருமாலுக்கு உவமித்துக் கூறுகின்றனவே யல்லாமல், மற்றைப்படித் திருமாலைப் புகழ்ந்து கூறவில்லை. மேற்கூறிய புறநானூற்றுச் செய்யுள்களிரண்டும் சேரனையே புகழ்கின்றன வல்லாமல், திருமாலைப் புகழவில்லை. இதனால், களவழிச் செய்யுள்களையும் புறநானூற்றுச் செய்யுள்களிரண்டையும் பாடிய புலவர் ஸ்ரீ விஷ்ணுபக்த ரெனச்சொல்லத்தக்கவ ரல்லரென்பது நன்கு விளங்குகின்றது. முதற்றிருவந்தாதிச் செய்யுள்களைப் பாடிய புலவரோ ஸ்ரீ விஷ்ணுபக்தியில் மிக மிக ஆழ்ந்தவர். ஆதலால், முதற்றிருவந்தாதியையும் யாப்பருங்கலவிருத்தியில் "பொய்கையார் வாக்கு" என்னும் குறிப்பொடு பொருந்திய தனிச்செய்யுள்களையும், களவழியையும், புறநானூற்றுக் "கோதை மார்பின்", "நாடனென்கோ" என்னும் தொடக்கத்துச் செய்யுள்களையும் பாடிய பொய்கையார் ஒருவரே யென்றாவது, ஒருகாலத்தவரே யென்றாவது கொள்ளுதல் தவறென்பது வெள்ளிடைமலை.

இந்நூலை இயற்றியவர் முதற்றிருவந்தாதியை இயற்றியருளிய பொய்கையாரா, அல்லது களவழி நாற்பதையும் மேற்கூறிய புறநானூற்றுச் செய்யுள்களிரண்டையும் இயற்றிய பொய்கையாரா என்பதை ஆராய்வோம். களவழிச் செய்யுள்களெல்லாம், பிற்காலத்துச் செய்யுள்கள்போல, நான்கிற்குட்பட்ட சீர்களையுடைய அடிகளையே கொண்டிருக்கின்றன. இந்நூல் செய்யுள்களிற் சில முதற்றிருவந்தாதி பாடிய பொய்கையார் காலத்துச் செய்

யுள்களிற் சில போல, நான்கிற்கு மேற்பட்ட சீர்களையு டைய அடிகளையும் கொண்டிருக்கின்றன. களவழிச் செய்யுள்களில் ஓர் அடியேனும் குற்றியலுகரத்திற் குப்பின் வரும் உயிர் வகரவுடம்படு மெய்யைப் பெறும் படியான தன்மையில் அமைந்திருக்க வில்லை. இந்நூல் நாற்பத்தொன்றும் செய்யுளின் முதலடியும் நாற்பத்து நான்காம் செய்யுளின் மூன்றுமடியும், முதற்றிருவந்தாதி யின் தொண்ணூற்றைந்தாம் செய்யுளின் முதலடி போல் குற்றியலுகரத்திற்குப் பின்வரும் உயிர் வகரவுடம்படு மெய்யைப் பெறும்படியான தன்மையில் அமைந்துள் ளன. களவழிச் செய்யுள்களில் ஒன்றேனும் முற்றிய லுகரத்தை ஈறுகக் கொண்ட சொல்லால் முடியவில்லை. இந்நூலின் இருபத்தேழாஞ் செய்யுள், முதற்றிருவந்தாதி யின் பன்னிரண்டாம் செய்யுளும் ஐம்பத்து மூன்றும் செய்யுளும் அறுபத்தேழாம் செய்யுளும் போல, முற்றி யலுகரத்தை ஈறுகக்கொண்ட சொல்லால் முடிந்திருக்கி ன்றது. களவழிச் செய்யுள்களில் ஒன்றேனும் பிற்கால த்து நூல்களில் பயின்றுவராத பழந்தமிழ்ச் சொற்களை யுடையதாயில்லை. இந்நூல் செய்யுள்களிற்சில முதற்றி ருவந்தாதிச் செய்யுள்களிற் சிலபோல அச்சொற்களை மிகுதியாக வுடையனவா யிருக்கின்றன. களவழியையும் மேற்கூறிய புறநானூற்றுச் செய்யுள்களிரண்டையும் இயற்றிய போய்கையார் ஸ்ரீவிஷ்ணு பக்தியில் ஆழ்ந்த வரென்று கொள்வதற்கு அவருடைய செய்யுள்களில் ஒன்றேனும் இடந்தர வில்லை. இந்நூலை இயற்

றிய பொய்கையார் ஸ்ரீ விஷ்ணு பக்தியில் ஆழ்ந்த வரென்று கொள்வதற்கு இந்நூலின் முதற் செய்யுளும், மூன்றும் செய்யுளும், இருபத்திரண்டாம் செய்யுளும் இடம் தருகின்றன. முதற்றிருவந்தாதியைப் பாடிய பொய்கையார் ஸ்ரீ விஷ்ணுவைத் தவிர வேறு ஒருவரை யும் பாடாதவரென்பது முதற்றிருவந்தாதிச் செய்யுள்கள் பலவற்றால் தெரிகின்றது. களவழி நாற்பதையும் மேற் கண்ட புறநானூற்றுச் செய்யுள்களிரண்டையும் பாடிய பொய்கையார் மனிதரையே பாடியுள்ளார். இந்நூலின் நாற்பதாம் செய்யுள் முதற்றிருவந்தாதியின் "திசையும் திசையுறு தெய்வமும் தெய்வத், திசையும் கருமங்க ளெல்லாம்—அசைவில்சீர், கண்ணன் நெடுமால் கடல்க டைந்த காரோத, வண்ணன் படைத்த மயக்கு" என் னும் செய்யுளின் கருத்தையும், இந்நூலின் பத்தாம் செய்யுள் முதற்றிருவந்தாதியின் "தெளிதாக வுள்ளத் தைச் செந்நிறீஇ ஞானத், தெளிவாக நன்குணர்வார் சிந்தை—எளிதாகத், தாய்நாடு கன்றேபோல் தண்டுழா யானடிக்கே, போய்நாடிக் கொள்ளும் புரிந்து" என் னும் செய்யுளின் கருத்தையும் உவமானத்தையும், இந் நூலின் நாற்பத்திரண்டாம் செய்யுளின் முதல் இரண் டடிகள் முதற்றிருவந்தாதியின் "அரியபுல னைந்தடக்கி யாய்மலர்கொண் டார்வம், புரிய பரிசினால் புல்கில்— பெரியனாய், மாற்றாது வீற்றிருந்த மாவலிபால் வண் கைநீர், ஏற்றானைக் காண்ப தெளிந்து" என்னும் செய்யு ளின் கருத்தையும், பிந்திய இரண்டடிகள் முதற்றிருவந்

தாதியின் "வினையால் அடர்ப்படார் வெந்நரகில் சேரார், தினையேனுந் தீக்கதிக்கட் செல்லார்—நினைதற், கரியானைச் சேயானை ஆயிரம்பேர் செங்கண், கரியானைக் கை தொழுதக் கால்" என்னும் செய்யுளின் கருத்தையும், இந்நூலின் நாற்பத்தைந்தாம் செய்யுள் முதற்றிருவந்தாதியின் "காப்புன்னை யுன்னக் கழியும் அருவினைகள், ஆப்புன்னை யுன்ன அவிழ்ந்தொழியும்—மூப்புன்னைச், சிந்திப்பார்க் கில்லை திருமாலே நின்னடியை, வந்திப்பார் காண்பர் வழி" என்னும் செய்யுளின் கருத்தையும் "ஆன்மா ஒன்றுண்டு; அந்தது உடலிற் பற்றி வினையை ஈட்டும்; அந்தது அவ்வுடற்பற்றை விட்டு மெய்ஞ் ஞானத்தை அடைந்து வீடு பெறும்" என்னும் விஷ்ணு மத சித்தாந்தத்தையும் கொண்டுள்ளன. களவழி நாற்பதுக்கும் மேற்கூறிய புறநானூற்றுச் செய்யுள்களுக்கும் இந்நூலுக்குமுள்ள மேற்காட்டிய வேற்றுமைகளால் இந்நூலை இயற்றியவர் களவழி நாற்பதையும் புறநானூற்றுக் "கோதைமார்பின்," "நாடனென்கோ" என்னும் தொடக்கத்துச் செய்யுள்களிரண்டையும் இயற்றிய பொய்கையார் அல்லரென்பதும், இந்நூலுக்கும் முதற்றிருவந்தாதிக்கு முள்ள மேற்காட்டிய ஒற்றுமைகளால் இந்நூலை இயற்றியவர் முதற்றிருவந்தாதியை இயற்றிய பொய்கையாரே யென்பதும் "உள்ளங்கை நெல்லிக்கனி" யாம். மேற்குறித்த யாப்பருங்கலவிருத்தி உதாரணத் தனிச்செய்யுள்களையும், பன்னிரு பாட்டியலில் "பொய்கையார்" என்ற பெயரொடு காணப்

படும் சூத்திரங்களையும், கேள்வி மட்டில் நாம் அறிந்துள்ள பொய்கையார் பாட்டியலையும் இயற்றிய பொய்கையார் யாவரென்பதைப் பற்றி ஆராய்தல் ஈண்டைக்கு ஆவசியகமின்று.

இந்நூலைத் தொகுத்தவர் மதுரையாசிரியர் என்று இந்நூலின் ஏட்டுப் பிரதியின் முதல் ஏட்டில் எழுதப் பட்டிருக்கிறதென்று மேலே கூறியுள்ளேன். ஆதலால், இந்நூலைக் கீழ்க்கணக்குப் பதினெட்டில் ஒன்றாகத் தொகுத்தவர் மதுரை யாசிரியர் என்று கொள்க. "மதுரை யாசிரியர்" என்னும் சிறப்புப் பெயரைப் பெற்று விளங்கியவர் மாறனார் என்பவரும் நல்லந்துவனார் என்பவருமே. இவ்விருவரும் கடைச்சங்கப் புலவர்கள். இவர்களில் எவர் இந்நூலைத் தொகுத்தவ ரென்பது தெரியவில்லை. இந்நூற்குக் கடவுள் வாழ்த்துப் பாடியவர் "பாரதம் பாடிய பெருந்தேவனார். இவர் எட்டுத் தொகை நூல்களிற் சிலவற்றிற்குக் கடவுள்வாழ்த்துப் பாடியதுபோல இந்நூற்கும் பாடியுள்ளார். இவரும் கடைச்சங்கப் புலவர். இந்நூலின் உ௲-ம் செய்யுளிற் கண்ட "கடுமிசையான் கட்டியிற் கொண்டற்று" என்பதன் பொருளைக் கடைச்சங்கப் புலவரில் ஒருவரான நக்கீரர் தமது இறையனாரகப் பொருளுரையில் எடுத்தாண்டிருப்பதை அச்செய்யுளின் விசேடவுரையில் குறித்துள்ளேன். இந்நூல் செய்யுள்கள் பலவற்றின் பொருள்களையும் சொற்களையும் எடுத்து நக்கீரர் காலத்தவரான திருவள்ளுவ நாயனார் தமது திருக்குறளின்கண்ணே

ஆண்டிருப்பதை. இந்நூலின் முன்னுரையில் கூறியுள்ளேன். இந்நூலின் முடிவில் சேர்க்கப்பட்டுள்ள இந்நூல் அரும்பத அகராதியிற் கண்ட சொற்களிற் பல நாலடியார், நான்மணிக்கடிகை, அறநெறிச்சாரம் முதலிய தொன்னூல்களில் மட்டுமே விசேஷமாகக் காணப்படுகின்றன. தொல்காப்பியனாரும் இந்நூலாசிரியரும் கடவுளைக் "கந்தழி" என்று கூறியுள்ளனர். இக்காரணங்களால் இந்நூல் மேற்கூறிய கடைச்சங்க காலத்து நூல்களுக்கு மிக முற்பட்டதென்பதற்கு ஐயமேயில்லை. ஆனால், கடைச்சங்கத்தினது காலத்தையும் அச்சங்கத்துப் பல புலவர்களது காலங்களையும், அச்சங்க மேறிய பல நூல்களின் காலங்களையும், ஆழ்வார்களாதியோர் காலங்களையும் இக்காலத்துக் 'கல்வெட்டு'ப் புலவர்கள் மிக வரையறுத்து நமது காலத்திற்கு மிகச் சமீபத்தில் கொண்டுவந்து விட்டிருக்கிறார்கள். அப்புலவரது கூற்றுத் தென்றிசைக் கூற்றுப் போல மிக்க அச்சத்தையும் வியப்பையும் விளைக்கின்றது. அவர்களது கூற்றை முன்னோட்டுவதற்கு வேண்டும் கருவிகளையும் காலத்தையும் தேடிக்கொண்டிருக்கின்றேன். அவை எனக்குக் கிடைத்தபின்னர் இந்நூல் இயற்றப்பட்ட காலம் முதலியவற்றை யான் வரையறுக்கத் துணிதல் நலமென்று கருதி, இந்நூல் இயற்றப்பட்ட காலம் மேற்கூறிய கடைச்சங்க நூல்களது காலத்திற்கு மிக முற்பட்டதென்று மட்டும் இப்பொழுது கூறி நிறுத்துகின்றேன்.

பிரம்பூர், சென்னை.
பிங்கள௵ ஆடி௴ 9௳ } வ. உ. சிதம்பரம் பிள்ளை.

# இன்னிலை

## உரைப்பாயிரம்.

இந்நூற்கு உரையெழுதவும், உரைப்பாயிரம் எழுதவும் யான் துணிந்தது "கான மயிலாடக் கண்டிருந்த வான்கோழி, தானும் அதுவாகப் பாவித்துத்—தானும் தன், பொல்லாச் சிறகை விரித்தாடி ற்றபோலும்." இந்நூல் சங்கமரீய நூல்களி லொன்று. இதனை இயற்றியவர் செந்தமிழ்ப்புலமையும் தெய்வபக்தியும் சேரப் பெற்ற பெரியார். இந்நூற் பாக்களிற் சில, மிக அரிய இலக்கணங்களுக்கு இலக்கியங்களாக அமைந்துள்ளன. இந்நூல் இக்காலத்துப் பழக்கத்திலில்லாத பழந்தமிழ்ச் சொற்கள் பலவற்றைக் கொண்டுள்ளது. இது, அறம், பொருள், இன்பம், வீடு என்னும் புருஷார்த்தம் நான்கினையும்கூறுகின்றது. அறத்தை அறிதல் அருமை. பொருளினை அறிதல் அதனினும் மிக அருமை. இன்பத்தை அறிதல் அதனினும் மிக அருமை. வீட்டினை அறிதல் அவை மூன்றையும் அறிதலினும் மிக அருமை. ஆகவே, அந்நான்கையும் அறிந்த பெரியாரே இந்நூற்கு உரையெழுதத்தக்கவ ராவர். அத்தகையார் ஒருவர் இந்நூற்கு உரை யெழுதியிருப்பதாகச் சிலர் கூறுகின்றனர். ஆனால், அவ்வுரை இதுகாறும் நம்மவரில் ஒருவருக்கும் கிடைத்ததாகத் தெரியவில்லை. உரையில்லாமலே இந்நூலை அச்சிட்டு வெளிப்படுத்தலா மென்றால்,

அதுபலர்க்குப் பயன்படாததாக முடியும். அதுபற்றி, இந்நூற்கு ஓர் உரை யெழுதி அதனுடன் இந்நூலை அச்சிட்டு வெளிப்படுத்தல் நலமென்று நினைத்தேன். இந்நூலிலுள்ள சில செய்யுள்களின் பொருள்கள் எனக்கு விளங்கின; பல செய்யுள்களின் பொருள்கள் எனக்கு விளங்க வில்லை.

பின்னர், இந்நூற் செய்யுள்களில் ஒவ்வொன்றின் பொருளையும் சென்னைப் பச்சை டப்பன் கல்லூரிச் சுதேச பாஷா அத்தியக்ஷகர் ஸ்ரீமான். தி. செல்வகேசவராய முதலியார் (யம்.ஏ.) அவர்களோடு ஆராய்ச்சி செய்தேன். ஸ்ரீமான். முதலியாரவர்களது இலக்கண இலக்கிய ஞான மேம்பாட்டினாலும் சொல்வன்மையாலும் இந்நூலின் பல செய்யுள்களின் பொருள்களை அறிந்தேன். அப்போதும், சில பாக்களின் சில பாகங்களின் பொருள்கள் தெளிவாக விளங்கவில்லை. அவற்றின் பொருள்கள் இன்னவையாக இருக்கலாமென்று ஊகித்தும், மற்றையவற்றின் பொருள்களை ஸ்ரீமான் முதலியாரவர்கள் முடிவுசெய்தவாறும், இந்நூற்கு ஓர் உரை யெழுதி அவர்களிடம் காட்டினேன். அவர்கள் அவ்வுரையைப் பார்த்துக் குற்றங்களைந்து குறைபெய்து தந்ததோடு, யான் ஊகித்துச் சில செய்யுள்களின் சில பாகங்களுக்கு எழுதியிருந்த வுரையின் சில பாகங்கள் பொருத்தமாகத் தோன்றாததால் அவ்வுரையை வேறுசில பண்டிதர்களிடம் காட்டும்படி கட்டளையிட்டார்கள். அவ்வாறே, அதனைச் சென்னைக் கிறிஸ்டியன் கல்லூரிச் சுதேச பாஷா அத்திய

க்ஷகர் ஸ்ரீமான். த. கனகசுந்தரம் பிள்ளை (பி. ஏ.) அவர்களிடம் காட்டினேன். அவர்கள் அதனை மிக்க அன்போடு ஏற்று, முழுக் கவனத்தோடு பார்த்து, பல சீர்திருத்தங்கள் செய்து தந்தார்கள். பின்னர், அதனை மஹாமஹோபாத்தியாயர் ம-ா-ா-ஸ்ரீ வே. சாமிநாதையர் அவர்களிடம் காட்டினேன். அவர்கள் அதனைப் பார்த்து அதனில் யாதொன்றும் செய்யாமல் எனக்கு அனுப்பிவிட்டார்கள். உடனே, அதனை அச்சிற்குக் கொடுத்தேன். அஃது அச்சாகி வர வர, அதனை ஸ்ரீமான் முதலியாரவர்களும் ஸ்ரீமான் பிள்ளையவர்களும் பலமுறை பார்த்துப் பலவாறு சீர்திருத்திப் பலவகையாக அழகுபடுத்தித் தந்தார்கள். அவர்கள் செய்த அவ்வரிய உதவிகளால் இந்நூல் ஓர் உரையொடு வெளிவருகின்றது. அவர்கள் உதவிக்கு யான் செய்யத் தக்கது "கைம்மாறு வேண்டா கடப்பாடு மாரிமாட், டென்னாற்றுங் கொல்லோ வுலகு" என்னும் பொய்யாமொழியார் வாக்கின் மெய்யைக் காட்டுதலேயாம்.

இவ்வுலகின்கண் 'ணுள்ள நல்ல உயிர்கள் துன்பங்களினின்று நீங்குவதற்காகவும் இன்பங்களை அடைவதற்காகவும் நாம் நினைக்கும் ஒவ்வொரு நினைப்பும், சொல்லும் ஒவ்வொரு சொல்லும், செய்யும் ஒவ்வொரு செயலும் அறமாம். விலைமதிப் புடையனவும் ஒருவர் மற்றொருவருக்கு மாற்றத்தக்கனவுமான நிலம் முதலியனவும், நீர் முதலியனவும், பொன் முதலியனவும், பலவகைப் பிராணிகளும், எல்லாச் செயப்படு பொருள்களும்

பொருளாம். அறநெறியில் மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஐம்பொறி களாலும் நாம் நுகரும் சுகங் களெல்லாம் இன்பமாம். அறத்தைப் புரிதற்கும், பொருளை ஈட்டி நன்னெறியிற் செலவிடற்கும், இன்பத்தை நுகர்தற்கும் கர்த்தாவாயுள்ள 'யான்' என்னும் சீவத் தன்மையை விடுதலே வீடாம். இவற்றைப்பற்றிய மற்றையவற்றை இந்நூலின் உரையகத்தே கண்டு கொள்க. எனது உரையில் காட்டப்பட்டுள்ள பாடபேதங்கள் எனக்குக் கிடைத்த ஏட்டுப்பிரதியி லுள்ளவை; அவற்றிற்கு வேறாகச் செய்யுளில் காணப்படுபவை பொருள்விளக்கம் கருதி என்னால் கொள்ளப்பட்டவை. இந்நூலை வாசிக்கும் பெரியோர் எனது உரையிலுள்ள குற்றம் குறைகளை எனக்குக் காட்டியருளி "நன்றியறிதல்" என்னும் நற்குணம் என்னிடம் உண்டாகும்படி செய்வார்களாக. எல்லாம் வல்ல இறைவன் துணை.

வ. உ. சிதம்பரம் பிள்ளை.

# இன்னிலை

## செய்யுள் முதற்குறிப் பகராதி.

# இன்னிலை

## பொருட்குறிப்பு.

# இன்னிலை

## உரிமையாக்கல்.

தெய்வ நோக்கமுந் திருமகள் சேர்க்கையும்
நாமகள் கேண்மையும் நன்மக்க ணேர்மையும்
நண்ணிய முத்தமிழ் நாட்டிற் சிறந்த
சோழநன் னாட்டிற் றொன்றுதொட் டெல்லாச்
செல்வமு மின்பமுஞ் செம்பொருண் ஞானமும்
அமைந்து விளங்கும் ஆண்டிப் பட்டி
அரசராய் நின்றுபல் லறங்க ளியற்றியும்
பாண்டிநன் னாட்டிற் பாடல்கொண் மதுரைத்
தமிழ்ச்சங் கத்தின் உபாக்கிரா சனராய்
நின்று தமிழினை நிலையுற வளர்த்தும்
சேரநன் னாட்டின செழுந்தலை நகரெனச்
சரித்திர வுண்மையைப் பிரித்துணை ருஞ்சிலர்
கழறு கின்ற கருவூர்ப் பாலனச்
சங்கத் தலைவராய்த் தகவொடு நின்று
பண்பொடு மன்பொடும் பாலித்துந் தம்பால்
வந்தபுல வர்க்கும் வாரா தவர்க்கும்
வேண்டிய பொருளெலாம் வேண்டியாங் களித்துஞ்
சைவம் வளர்த்துந் தருமம் புரியும்
பெத்தாச்சிச் செட்டிப் பெரியார்க்
குவப்புடன் இன்னிலை யுரிமையாக் கினனே.

வ. உ. சிதம்பரம்

# இன்னிலை

'இன்னிலை' என்பது 'இனிமையாகிய நிலை' எனப் பொருள்படும். அஃது அன்மொழித்தொகையாய் அந்நிலையை அளிக்கும் இந்நூலுக்குப் பெயராயிற்று.

## கடவுள் வாழ்த்து.

வேலற் றரீஇய விரிசடைப் பெம்மான்
வாலிழை பாகத் தமரிய கொழுவேற்
கூற்றங் கதழ்ந்தெறி கொன்றையன்
கூட்டா வுலகம் கெழீஇய மலிந்தே.

அநுவயம் :—வேலனைத் தரீஇய, விரிசடைப் பெம்மான், வால் இழை பாகத்து அமரிய, கொழு வேலையுடைய கூற்றத்தைக் கதழ்ந்து எறிந்த, கொன்றையன் கூட்டாக உலகம் மலிந்து கெழீஇய.

பதவுரை :—வேலன் - வேலாயுதத்தை யுடைய முருகனை, தரீஇய-தந்த, விரிசடை-விரிந்த சடையை யுடைய, பெம்மான்-பெருமானும், வால் இழை-ஒளி பொருந்திய ஆபரணத்தையுடைய உமா தேவியினது, பாகத்து - வலப்பாகத்தில், அமரிய - அமர்ந்த, கொழு-சிறந்த, வேல்-வேலாயுதத்தையுடைய, கூற்றம்-எமனை, கதழ்ந்து-கோபித்து, எறி-எறிந்த, கொன்றையன்-கொன்றைமலரைச் சூடியவனுமாகிய சிவபிரான், கூட்டாக - துணையாக, உலகம் - எல்லாவுலகங்களும்,

மலிந்து-பெருகி, கெழீஇய-விளங்கின.

பொழிப்புரை :—வேலாயுதத்தையுடைய முருகனைத் தந்த, விரிந்த சடையையுடைய பெருமானும் ஒளி பொருந்திய ஆபரணத்தையுடைய உமாதேவியினது வலப்பாகத்தில் அமர்ந்த, சிறந்த வேலாயுதத்தையுடைய எமனைக் கோபித்து எறிந்த, கொன்றை மலரைச் சூடியவனுமாகிய சிவபிரான் துணையாக எல்லா உலகங்களும் பெருகி விளங்கின.

கருத்துரை :—இறைவனது சேர்க்கையால் உலகங்களெல்லாம் பெருகி விளங்கின.

விசேடவுரை :—இச்செய்யுள் பாரதம் பாடிய பெருந்தேவனார் இயற்றியது. இது படர்க்கைப் பரவல். அஃதாவது, கடவுளைப் படர்க்கையிடத்து வைத்து வாழ்த்துதல். தேவர்களில் முதன்மை வாய்ந்த தேவேந்திரன் முதலியோர்க்குச் சூராதியரால் இடுக்கண் நேர்ந்த காலத்தில், அச்சூராதியரை ஒழித்துத் தேவேந்திராதியரை இரட்சித்தமை தோன்ற "வேலற்றரீஇய" என்றும், மக்களில் முதன்மை வாய்ந்த மார்க்கண்டனாதியருக்கு எமனாதியரால் இடுக்கண் நேர்ந்த காலத்தில், அவ்வெமனாதியரை ஒழித்து மார்க்கண்டனாதியரை இரட்சித்தமை தோன்றக் "கூற்றங்கதழ்ந்தெறி கொன்றையன்" என்றும் கூறினர். வாலிழை பாகத் தமர்ந்தது உலகம் நிலைபெறவென்க. 'கூட்டாக' என்பது ஈறு கெட்டு நின்றது. 'மலிந்தே' என்பதில் ஏகாரம் ஈற்றசை. தரீஇ' என்றும் பாடம்.

# நூல்

## அறப்பால்.

அறப்பால்' என்பது 'அறத்தைப் பற்றிக் கூறும் பகுதி' எனப் பொருள்படும். பொருள், இன்பம், வீடு என்னும் மூன்றையும் அளிப்பதாதலால், அறம் முதற் கண் கூறப்பட்டது.

க. அன்றமரிற் சொற்ற வறவுரைவீழ் தீக்கழுது
மன்றுயர்ந்து போந்தவகைதேர்மின்-பொன்று
வறமறிந்தோன் கண்ட அறம்பொருள்கேட் டல்லன்
மறமொறுக்க வாய்த்த வழக்கு.

அநுவயம் .—அன்று அமரில் சொற்ற அற வுரையை வீழ்ந்த தீக் கழுது,உயர்ந்து மன்றின்கண் போந்த வகையைத் தேர்மின்; பொன்று அறத்தை அறிந்தோன் கண்ட அறத்தையும் பொருளையும் கேட்டு அல்லல் மறத்தை ஒறுக்க. (இது) வாய்த்த வழக்கு.

பதவுரை :—அன்று-முற்காலத்தில், அமரில்-பாரதயுத்தத்தில், சொற்ற-(கண்ணன் அர்ச்சுனனுக்குச்) சொல்லிய, அறவுரை-(கீதையாகிய) தருமவுரையை, வீழ்-விரும்பிக் கேட்ட, தீ-தீய, கழுது-பேய், உயர்ந்து-(தனது பேய்த்தன்மையின் நீங்கி) உயர்வுற்று, மன்று-(ஆன்றோரது)சபையின்கண், போந்த-போய்ச் சேர்ந்த வகை-வகையை, தேர்மின்-அறிவீராக; பொன்று-அழியாத, அறம்-தருமங்களை, அறிந்தோன்-உணர்ந்தோன், கண்ட-உரைத்த, அறம் - அற நூலையும், பொருள்-பொருள் நூலையும், கேட்டு-கேட்டு, அல்லல்-துன்பம்

களை விளைக்கின்ற, மறம்-அதருமங்களை, ஒறுக்க-நீக்கு வீராக; (இது) வாய்த்த-இது (மேலான நிலையை அடைவதற்குச்) சிறந்த, வழக்கு-நெறியாம்.

பொழிப்புரை :—முற்காலத்தில் பாரத யுத்தத்தில் (கண்ணன் அர்ச்சுனனுக்குச்) சொல்லிய (கீதையாகிய) தரும வுரையை விரும்பிக்கேட்ட தீய பேய் (தனது பேய்த்தன்மையின் நீங்கி) உயர்வுற்று ஆன்றோரது சபையின்கண் போய்ச்சேர்ந்த வகையை அறிவீராக; கெடாத தருமங்களை உணர்ந்தோன் உரைத்த அறநூலையும் பொருள்நூலையும் கேட்டுத் துன்பங்களை விளைக்கின்ற அதருமங்களை நீக்குவீராக; இது (மேலான நிலையை அடைதற்குச்) சிறந்த நெறி.

கருத்துரை :—அறநூல்களிலும் பொருள்நூல்களிலும் சொல்லியுள்ள விதிகளைக் கடைப்பிடித்து ஒழுகுதலே மேலான நிலையை அடைதற்குச் சிறந்தநெறி.

விசேடவுரை :—அறவுரையைப் பேய்ந்த இக்ழுது ம்ன்று உயர்ந்து போந்த கதை வருமாறு :—"துரியோதனன் முதலியோரும் தருமன் முதலியோரும் யுத்தம் செய்வதற்காகக் குருக்ஷேத்திரத்திலே போய்நின்றனர். அவருள்ளே துரியோதனன் பக்கத்தில் போர் புரிய நின்றவர் யார் யார் என்று அர்ச்சுனன் பார்த்தான். அங்கு நின்றவரெல்லாம் தன் சுற்றத்தாராகத் தோன்றினர். அது கண்டு அர்ச்சுனன் கண்ணபிரானை நோக்கி "அரசு நிமித்தம் இங்குள்ள எனது சுற்றத்தாரை யெல்லாம் கொல்லேன்" என்று சொல்லிப்

போர்புரிய மறுத்தான். அப்போது கண்ணபிரான், அவனைக்கொண்டு போர் செய்விக்க எண்ணி, அவனுக்குக் கீதையை உபதேசித்தார். அதனைப் பக்கத்தில் நின்று கேட்ட ஒரு பேய் பிரகிருதிக்கும் ஆத்மாவுக்குமுள்ள பேதத்தை உள்ளவாறே உணர்ந்துகொண்டது. இதனை "பிசாசவதந்யார்த்தோபதேசேபி (இதன்பொருள்:- பிறனுக்குச்செய்த உபதேசத்தினால் பேய் ஒன்றுக்கு நன்மை உண்டாயவாறு போல இதோபதேசங்களைப் பக்கத்தினின்று கேட்போருக்கும் நன்மை உண்டாகும்) என்னும் சாங்கிய சூத்திரத்தாலும் அறிக.

'கண்ட என்பது கண்டு 'உரைத்த' என்னும் பொருள் தந்துநின்றது. 'வீழ்' என்னும் காலங்கரந்த பெயரெச்சம் இங்கு இறந்த காலத்தை உணர்த்திநின்றது. 'அன்று' என்பது பண்டறிசுட்டு. (க)

உ. பொருள்விழைவார் போற்றா ருடனல னம்மை
யருள்விழைவா ரஃதே முழுவெவ்வம் பாய்நீ
லிருளிழையார் வீழ்வார்மேற் பாலாக்கா ராமீ
றருளிழையார் தாமு மது.

அநுவயம் :—பொருளை விழைவார் உடலது நலத்தைப் போற்றார் ; நம் ஐயது அருளை விழைவாரும் அஃதே ; முழு எவ்வம் பாய் நீல் இருள் இழையாரை வீழ்வார் மேல் பாலை ஆக்கார் ; ஆம் ஆறாகிய அருளை இழையார்தாமும் அது.

பதவுரை:—பொருள் விழைவார்-பொருளை ஈட்ட விரும்புவோர், உடல் நலன்-(தமது) உடம்பினது சுகத்

லை த, போற்றார்-பேணுதல் செய்யார்; நம் ஐ-நமது இறைவனது, அருள் விழைவார்-கிருபையைப் பெற விரும்புவோரும், அஃதே-உடம்பினது சுகத்தைப் பே ணுதல் செய்யார்; முழு எவ்வம்-பூரண துன்பம், பாய்-பாய்வதற்கு ஏதுவாகிய, நீல் இருள் இழையார்-கரிய இருள்போன்ற கூந்தலையுடைய மகளிரை, வீழ்வார்-விரும்பும் ஆடவர், மேல் பால்-மேலான வீட்டை, ஆக்கார்-ஆக்குதல்செய்யார்; ஆம் ஆறு-தாம் மேம்படுதற்குரிய நெறியாகிய, அருள் - சிவகாருண்ணி யத்தை, இழையார்தாமும்-செய்யார்தாமும், அது-மேலான வீட்டை ஆக்குதல் செய்யார்.

பொழிப்புரை :—பொருளை ஈட்ட விரும்புவோர் தமது உடம்பினது சுகத்தைப் பேணுதல்செய்யார்; நமது இறைவனது கிருபையைப் பெற விரும்புவோரும் உடம்பினது சுகத்தைப் பேணுதல் செய்யார். முழுத் துன்பமும் பாய்வதற்கு ஏதுவாகிய இருள்போன்ற கூந்தலையுடைய மகளிரை விரும்புவோர் மேலான வீட்டை ஆக்குதல் செய்யார்; தாம் மேம்படுதற்குரிய நெறியாகிய சிவகாருண்ணியத்தைச் செய்யார்தாமும் மேலான வீட்டை ஆக்குதல் செய்யார்.

கருத்துரை :—சரீர சுகத்தை விரும்புவோர் இவ்வுலகப் பொருளையும் இறைவனது அருளையும் அடையார். சிற்றின்பத்தை விரும்புவோரும் சிவகாருண்ணியத்தைச் செய்யாதாரும் பேரின்பத்தை அடையார்.

விசேடவுரை :—"அருளில்லார்க் கவ்வுலகம் இல்லை" என்றது திருக்குறள். இருள் என்பது ஆகு பெயர். 'அருள்விழைவா ரத்தே' என்றும் பாடம். (உ)

௩. கோலப் புறவின் குரற்கூவல் புட்சிமிழ்த்தோன்
பாலித் தலைபரப்பச் சீரொலிக்கு—மாலின்
விரிநிழல் தாமெய்தார் தீப்பழுவத் துய்ப்ப
ருரிமை யிவணோரா தார்.

அநுவயம் :—புள்ளைச் சிமிழ்த்தோன் பாலியின் கண் தலையைப் பரப்பக் கோலப்புறவின் குரல் கூவல் சீர் ஒலிக்கும். (அது போல) இவண் உரிமையை ஓரா தார் மாலின் விரிந்த நிழலைத் தாம் எய்தாராய்த் தீப்ப ழுவத்துள் உய்ப்பர்.

பதவுரை :—புள் - பல பறவைகளை, சிமிழ்த் தோன்-பிடித்த வேடன், பாலி-ஆலமரத்தின்கண், தலைபரப்ப-தனது வலையை விரிக்குமாறு, கோலப் புறவின்-அழகிய புறாக்களினது, குரல் கூவல்-மிடற்று க்கூவல், சீர் ஒலிக்கும்-நன்றாக ஒலிக்கும். (அது போல) இவண்-இவ்வுலகில் உரிமை ஓராதார்-தமது கடமையை அறியாத மாந்தர், மாலின்-திருமாலினது, விரிநிழல்-திருவடியின் விரிந்த நிழலை, தாம் எய்தார்-தாம் அடையாதவராய், தீப்பழுவத்து-துன்பம் நிறைந்த நரகமாகிய காட்டின்கண்; உய்ப்பர்-(தம்மைச்) செலு த்துவர்,

பொழிப்புரை:—பல பறவைகளைப் பிடித்த வே டன் ஆலமரத்தின்கண் வலையை விரிக்குமாறு அழகிய

புறாக்களினது மிடற்றுக்கூவல் நன்றாக ஒலிக்கும். (அதுபோலத்) தமது கடமையை அறியாத மாந்தர் திருமாலினது திருவடியின் விரிந்தநிழலைத் தாம் எய்தாதவராய்த் துன்பம் நிறைந்த (நரகமாகிய) காட்டின் கண் (தம்மைச்) செலுத்துவர்

கருத்துரை :—செய்யக்கடவ அறத்தைச் செய்யாதார், வீட்டின்பத்தை இழந்து நரகத்துன்பத்தை அநுபவிப்பர்.

விசேடவுரை :—'புள் சிமிழ்த்தோன்' என்று இறந்த காலத்தாற் கூறியது, அவன் பல புட்களைப் பிடித்து வைத்திருப்பதைக் கண்டும் புறாக்கள் சத்திட்டன என்பதைக் காட்டுதற்கே. அப்புறாக்களைப் போலவே மாந்தரும், பலர் மறம் புரிந்து துன்பத்தை அநுபவிப்பதைக் கண்டும், மறத்தைப் புரிகின்றன ரென்பதை ஆசிரியர் குறிப்பித்தனர். இறைவனது திருவடிநிழல் உலகம் முழுவதும் பரவியிருத்தலால் அது 'விரிநிழல்' என்னப்பட்டது. காடவது நரகம்; நல்ல உயிர்களின் சஞ்சாரமில்லாமையால் அது 'காடு' எனப்பட்டது. 'மாலி' என்றும் பாடம். 'பரப்ப' என்பது 'செய' என்னும் வாய்பாட்டு வினையெச்சம். இது காரியப்பொருட்டாய் நிற்றலின் எதிர்கால முணர்த்தியது. (௩)

௪. கழிவிரக்கங் கொள்ளார் கதழ்வாளார் சேர்த்துப்
பழிமுறுகக் கோடார் பயன்சேர்த்—தழிமுதலை
யில்லங்கொண் டாக்கா ரிடும்பைத் தலைத்தணப்பர்
நல்லறனை நாளணிகொள் வார்.*

அநுவயம் :—நல் அறனை நாள் அணிகொள்வார், கழிவு இரக்கம் கொள்ளார்; கதழ்வு ஆளார்; வேர்த்துப் பழி முறுகக் கோடார்; பயன் போத்து அழி முதலை இல்லம் கொண்டு ஆக்கார்; இடும்பையாகிய தளையைத் தணப்பர்.

பதவுரை :—நல் அறனை-நன்மையையே பயக்கும் தருமத்தை, நாள் அணி-நாள்தோறும் அணியும் அணியாக, கொள்வார்-கொள்பவர், கழிவு-கழிந்த காரியங்களுக்காக, இரக்கம் கொள்ளார்-இரங்குதல் செய்யார்; கதழ்வு-பகைமையை, ஆளார்-மேற்கொள்ளார்; வேர்த்து-வெகுண்டு,பழிமுறுக-பழிக்கேதுவாகிய அதருமம் மிகுமாறு, கோடார்-(தருமநெறியை விட்டு) விலகார்; பயன்-அறப்பயனை, போத்து-விடுத்து, அழி முதலை-அழியும் பொருளை, இல்லம் கொண்டு-தமது வீட்டில் கொண்டு, ஆக்கார்-பெருக்கார்; இடும்பைத் தளை-துன்பமாகிய விலங்கிலிருந்து, தணப்பர்-நீங்குவார்.

பொழிப்புரை :—நன்மையையே பயக்கும் தருமத்தை நாள்தோறும் அணியும் அணியாகக் கொள்பவர் கழிந்த காரியங்களுக்காக இரங்குதல் செய்யார்; பகைமையை மேற்கொள்ளார்; வெகுண்டு பழிக்கேதுவாகிய அதருமம் மிகுமாறு (தருமநெறியை விட்டு) விலகார்; அறப்பயனை விடுத்து அழியும் முதலைத் தமது வீட்டில் கொண்டு பெருக்கார்; துன்பமாகிய விலங்கிலிருந்து நீங்குவார்.

கருத்துரை :—அறத்தைப் புரிபவர்களை மறச் செயல்களும் அவற்றின் பயன்களாகிய துன்பங்களும் அணுகா.

விசேடவுரை :—நல்லறனை நாளணி கொள்வார் கழி விரக்கம் கொள்ளாரென்பது "கற்றார்முற்றோன்று கழிவிரக்கம்" என்னும் நான்மணிக்கடிகையாலும், பகைமையைக் கொள்ளாரென்பது "பகையென்னும் பண்பிலதனை ஒருவன், நகையேயும் வேண்டற்பாற் றன்று" என்னும் திருக்குறளாலும், வெகுளியைக் கொள்ளாரென்பது "மறத்தல் வெகுளியை யார்மாட் டும் தீய, பிறத்தல் அதனால் வரும்" என்னும் திருக்கு றளாலும், அறப்பயனை விடுத்து அழியும் முதலைப் பெருக்காரென்பது "சலத்தால் பொருள்செய்தே மார்த்தல் பசுமண், கலத்துணீர் பெய்திரீஇ யற்று" என்னும் திருக்குறளாலும் விளங்கும். "கழிவிரக்கம் கோடார்" என்றும் பாடம். (ச)

ரு. திரைத்த விரிக்கிற் றிரைப்பினு வாய்போ
லுரைத்த வுரையதனைக் கேட்டு—முரைத்த
பயன்றவா செய்வார் சிலரேதந் நெஞ்சத்
தியன்றவா செய்வார் பலர்.

அநுவயம் :—உரைத்த உரையதனைக் கேட்டும், திரைத்தவற்றை விரிக்கின் நாவாய்போல் உரைத்த பயன் தவாது செய்வார் சிலரே ; திரைப்பின் (நாவாய் போல்) தம் நெஞ்சத்து இயன்றவாறு செய்வார் பலர்.

பதவுரை :—உரைத்த-(பெரியோர்) கூறிய, உரை யதனை-அறவுரைகளை, கேட்டும்- கேட்டும், திரைத்த- சுருண்ட பாய்களை, விரிக்கின் - விரித்தால், நாவாய் போல்- (கப்பலோட்டி குறித்த வழியில் செல்லும்) மரக்கலம் போல, உரைத்த பயன்- (அவர்) சொல்லிய அறவுரைகளின் பயன்கள், தவாது செய்வார்-கெடாது செய்பவர், சிலரே - சிலரே ; திரைப்பின் - (அப்பாய் களைச்) சுருட்டினுல், நாவாய் போல்-(காற்றின் போக் கில் செல்லும்) மரக்கலம் போல, தம் நெஞ்சத்து இயன்றவாறு-தமது மனத்தில் இயன்றவாறு, செய் வார்-செய்பவர், பலர்-பலராவர்.

பொழிப்புரை :—பெரியோர் கூறிய அறவுரை களை கேட்டும், சுருண்ட பாய்களை விரித்தால் (கப்ப லோட்டி குறித்த வழியில் செல்லும்) மரக்கலம் போலே,(அவர்) சொல்லிய அறவுரைகளின் பயன்கள் கெடாதவாறு செய்பவர் சிலரே ; (அப்பாய்களைச்) சுருட்டினுல் (காற்றின் போக்கில் செல்லும்) மரக் கலம் போலத் தமது மனத்தில் இயன்றவாறு செய்ப வர் பலர்.

கருத்துரை :—இவ்வுலகத்தின்கண் ஆன்ருேர் கூறிய அறவுரைப்படி நடக்கின்ற மாந்தர் சிலர்; தமது மனம்போன போக்கில் நடக்கின்றவர் பலர்.

விசேடவுரை :—தொல்காப்பியச் செய்யுளியலு ரையில் அவை யடக்கத்திற்கு மேற்கோளாக இச்செய் யுளை எடுத்தாண்டி போரசிரியர் “உரைத்த உரை

போலக் கேட்டும்" எனப் பாடம் கொண்டனர். 'தவாது' என்பதும் 'இயன்ற வாறு' என்பதும் ஈறு கெட்டு நின்றன. 'நாவாய் போல்' என்பது பின்னரும் கூட்டி யுரைக்கப்பட்டது. (ரு)

சு. அம்மை யிழைத்த தலைப்பட் டழிவாயா
விம்மையுங் கொண்டுறத்து மீர்ம்பெயலா-மும்மை
யுணர்ந்தார் திருவத்த ரோரா ருழண்டைத்
தளைப்படுவர் தட்பந் தெருர்.

அநுவயம் :—அம்மை இழைத்த தலைப்பட்டு அழிவை வாயாது இம்மையும் கொண்டு உறுத்தும் ஈர்ம் பெயலாம்; உம்மை உணர்ந்தார் திருவத்தர்; ஓரார் தட்பம் தெருராய் உழண்டைத் தளைப்படுவர்.

பதவுரை :—அம்மை - முற்பிறப்பில், இழைத்த- செய்த நல்வினை தீவினைகள், தலைப்பட்டு-(தமது பயன் களைப்) பொருந்தி, அழிவு வாயாது -(அப்பிறப்பில் பயந்து) அழிவை யுறுது, இம்மையும் - இப்பிறப் பிலும், கொண்டு உறுத்தும்-கொண்டு பயக்கும், ஈர்ம் பெயலாம்-கூதிர்கால மழையின் தன்மையனவாம்; உம்மை உணர்ந்தார் - (இப்பிறப்பில் எய்தும் அநுபவங் களால் முற்பிறப்பிற் செய்த வினைகளை அறிதல்போல இப்பிறப்பிற் செய்யும் வினைகளால்) வருபிறப்பில் எய் தும் அநுபவங்களை அறிந்தவர், திருவத்தர்-(நல்ல வினைகளைச் செய்து) உண்மையான செல்வத்தையுடை யவராவர்; ஓரார்-(மேற்கண்டவாறு) வருபிறப்பின் அநுபவங்களை அறியாதார், தட்பம் தெருர்-(தமது)

*பாசங்களை விடாதவராய், உழண்டைத் தளைப்படுவர்-துன்பமாகிய விலங்கினிற் படுவர்.*

பொழிப்புரை :—*முற்பிறப்பில் செய்த நல்வினை தீவினைகள் (தமது பயன்களைப்) பொருந்தி (அப்பிறப் பில்பயந்து) அழிவை யுறாது இப்பிறப்பிலும் கொண்டு பயக்கும் கூதிர்கால மழையின் தன்மையனவாம்; (இப்பிறப்பில் எய்தும் அநுபவங்களால் முற்பிறப் பிற் செய்த வினைகளை அறிதல் போல, இப்பிறப்பிற் செய்யும் வினைகளால்) வரு பிறப்பில் எய்தும் அநுபவ ங்களை அறிந்தவர் (நல்ல வினைகளைச் செய்து) உண்மை யான செல்வத்தை யுடையவராவர்: (மேற் கண்ட வாறு) வரு பிறப்பின் அநுபவங்களை அறியாதார், (தமது) பாசங்களை விடாதவராய்த் துன்பமாகிய விலங்கினிற் படுவர்.*

கருத்துரை :—*ஒரு பிறப்பிற் செய்த வினைகள் அப்பிறப்போடு நில்லாது மறுபிறப்பிலும் சென்று தமது பயன்களை அளிக்கு மாதலால் யாவரும் இப்பி றப்பிலே நல்ல வினைகளைச் செய்யக் கடவர்.*

விசேடவுரை :—*கூதிர்கால மழை நிலத்திற்கு மிக்க ஈரத்தையும் பயிர்களுக்கு மிக்க ஈரத்தையும் உயிர்களுக்கு மிக்க குளிரையும் நல்குவதால், அது ஈர்ம்பெயலெனப்பட்டது. 'அக்காலத்து மழை,' பெய்த அக்காலத்து விளையுளையும், குளம் முதலியவற்றில் தங்கி அடுத்த காலத்து விளையுளையும் நல்குவதால், அது அம்மையும் இம்மையும் பயன் கொடுக்கும் • அம்*

மைவினைகளுக்கு உவமிக்கப் பட்டது. 'தட்பம்' என் பது 'தள்' (தள்-கட்டு) என்னும் பகுதியடியாகப் பிறந்த தொழிற் பெயர். 'தட்பம் தெறார்' என்பதற் கு முன்வினைப் பயனாகிய மழையின் குளிர்ச்சியை வெல்லார்' என்று உரைப்பினும் அமையும். "இறந்த பிறப்பில்தான் செய்த வினையைப், பிறந்த பிறப்பால் அறிக—பிறந்திருந்து, செய்யும் வினையால் அறிக இனிப் பிறந், தெய்தும் வினையின் பயன்" என்பது அறநெறிச்சாரம். 'அழிவு' என்பதும் 'வாயாது' என்பதும் ஈறு கெட்டுநின்றன. "ஈர்ப்பெயலாம்" என்றும் பாடம். (சு)

எ. தாமீட் டருவினைக டண்டா வுடம்பொன்ற
நாமீட் டொறுக்கொணா ஞாங்க ரடிப்பட்ட சிம்பால்
பிதுக்கப் பெயல்போற் பிறப்பிறப்பும் போகா
கதுப்போ டிறுத்தல் கடன்.

அநுவயம்:—தாம் ஈட்டும் அருவினைகள் தண்டா; உடம்பு ஒன்ற நாம் மீட்டு ஒறுக்க ஒண்ணா; ஞாங்கர் அடிப்பட்ட சிம்பால் பிதுக்கப் பெயல்போல், பிறப்பும் இறப்பும் போகா; (ஆதலால்) கதுப்போடு இறுத்தல் கடன்.

பதவுரை:—தாம் ஈட்டு-தாம்செய்யும், அருவினை கள்-அரிய வினைகளின் பயன்கள், தண்டா-(தம்மைப் பொருந்தாமல்) கெடமாட்டா; உடம்பு ஒன்ற-(அவை) உருவைப் பொருந்தின், நாம் மீட்டும்-நாம் மறுபடியும், ஒறுக்க ஒண்ணா-(அவற்றை) நீக்கமுடியா; ஞாங்கர்-

(பசுவினது மடியின்) அடியில், அடிப்பட்ட-பொருந்தியுள்ள, சிம்பால்-இளம்பால், பிதுக்க-(மடியைப்)பிதுக்க, பெயல்போல்-பெய்தல்போல, பிறப்பும் இறப்பும்-ஜனனமும் மரணமும், போகா-(வினைகள் இருக்குங் காலமெல்லாம்) வந்துகொண்டேயிருக்கும். கதுப்போடு இறுத்தல்-(ஆதலால், அவ்வினைகளை) மூட்டோடு ஒழித்தல், கடன்-நமது கடமை.

பொழிப்புரை :—தாம் செய்யும் அரிய வினைகளின் பயன்கள் (தம்மைப் பொருந்தாமல்) அழியமாட்டா; அவை உருவைப் பொருந்தின் மறுபடியும் (அவற்றை) நீக்கமுடியா ; (பசுவின் மடியின்) அடியில் பொருந்தியுள்ள இளம்பால் (மடியைப்) பிதுக்கப் பெய்தல்போல, ஜனனமும் மரணமும் (வினைகள் இருக்குங் காலமெல்லாம்) வந்துகொண்டேயிருக்கும். (ஆதலால், அவ்வினைகளை) மூட்டோடு ஒழித்தல் நமது கடமை.

கருத்துரை :—செய்த வினைகளின் பயன்கள் செய்தாரைச் சேராமல் நீங்கா; செய்தவினை இருக்கும்வரையில் ஜனனமும் மரணமும் வந்துகொண்டேயிருக்கும்.

விசேடவுரை :— " பல்லாவுள் உய்த்து விடினும் குழக்கன்று, வல்லதாம் தாய்நாடிக் கோடலைத்—தொல்லைப், பழவினையும் அன்ன தகைத்தேதற் செய்த, கிழவனை நாடிக் கொளற்கு."—நாலடி. " உறற்பால நீக்கல் உறுவர்க்கும் ஆகா".—நாலடி. " இறத்தலும் பிறத்தல் தானும் என்பன இரண்டும் யாண்டும், திறத்துளி நோக்கிற் செய்த வினைதரத் தெரிந்த அன்றே ".—

இராமாயணம். 'ஒறுக்க' என்பது ஈறும், 'ஒண்ணு' என்பது இடையும், 'பிறப்பும்' என்பது உம்மையும் கெட்டு நின்றன. இச்செய்யுளின் இரண்டாம் அடி ஐந்து சீர்களால் வந்தது காண்க. வெண்பாவினும் ஆசிரியப்பாவினும் ஐஞ்சீரடி விரவிவரு மென்பதனை "வெண்டளை விரவியும் ஆசிரியம் விரவியும், ஐஞ்சீ ரடி யுமுளவென மொழிப" என்னும் தொல்காப்பியச் சூத்திரத்தானும், அச்சூத்திரவுரையில் காட்டப்பட்டுள்ள "கண்டகம் பற்றிக் கடக மணிதுளங்க, வொண்செங் குருதியி னோடு கிடப்பதே கெண்டிக், கெழுதகை யில் லேன் கிடந்தூடப் பன்னாள், அழுதகண் ணீர்துடைத்த கை" என்னும் (ஐஞ்சீரடியை இரண்டாவதாகக் கொண்ட) உதாரணச் செய்யுளானும் அறிக. (எ)

அ. தூய்சொல் லாட்டுந் துணிவறிவுந் துன்பங்க
ளோயக் கலங்காத் துணைவலியும்-பூயல்
படுக்குந் திருவத்த னோரே பறிப்ப
ரடுக்கு மடிச்சேரா வாறு.

அநுவயம்:—தூய சொல்லாட்டும் துணிவு அறிவும் துன்பங்கள் ஓயக் கலங்காத துணைவலியும் பூயல் படுக்கும் திருவத்தனோரே, அடுக்கும் மடிச்சேரா ஆறு பறிப்பர்.

பதவுரை:—தூய சொல்லாட்டும்-தூய சொற்களைச் சொல்லுதலும், துணிவு அறிவும்-நூலோர் துணிந்தவற்றை அறிதலும், துன்பங்கள் ஓய-துன்பங்கள் வந்து பொருந்தின், கலங்காத துணைவலியும்-மனம்

அலங்காதிருத்தற்கு ஏதுவாகிய துணை வலியும், பூயல் படுக்கும்-பொருந்துதலைச் செய்யும், திருவத்தரோே- உண்மையான செல்வரே, அடுக்கும்-ஒன்றன்பின் ஒன் ருக அடுத்துவரும், மடி சேரா ஆறு-பிறப்பைப் பொருந்தாத நெறியினை, பறிப்பர்-அடைவர்.

பொழிப்புரை :—தூய சொற்களைச் சொல்லு தலும், நூலோர் துணிந்தவற்றை அறிதலும், துன்ப ங்கள் வந்து பொருந்தினும் கலங்காதிருத்தற்கு ஏது வாகிய துணைவலியும் பொருந்துதலைச் செய்யும் உண்மையான செல்வரே, ஒன்றன்பின் ஒன்ருக அடுத்துவரும் பிறப்பைப் பொருந்தாத நெறியினை அடைவர்.

கருத்துரை :—மனம் வாக்குக் காயங்களின் தூய் மையும், ஆன்ருேர் துணிவுகளை அறியும் அறிவும், பெரியார் துணையும், செல்வமும் உடையராயிருத்தலே, முத்தி நெறியிற் சேர்க்கும்.

விசேடவுரை :—“சிறுமையுள் நீங்கிய இன் சொல் மறுமையும், இம்மையும் இன்பம் தரும்” என் பதும “அறிவுடையார் எல்லாம் உடையார் அறிவிலார், என்னுடைய ரேனும் இலர்” என்பதும், “மனநலத் தின் ஆகும் மறுமைமற் றஃதும், இனநலத்தின் ஏமாப் புடைத்து” என்பதும் திருக்குறள். செய்யுளிற் சொல்லப்பட்ட நற்குணங்களும் நற்றுணையும் இல்லா தார், பாவங்களே புரிந்து மேலும் மேலும் பிறப்பினை அடைவர் என்று கூறியபடி. பிறப்பை அறுப்பதற்கு

நெறியாகிய அறத்தைப் புரிய நல்கூர்ந்தாரால் முடியாதாதலால், செல்வரே பிறப்பினை அறுக்கும் நெறியினை அடைவரென்று கூறினர். தூய சொல்லையே சொல்பவர் தூய உள்ளத்தையும் தூயசெயலையும் கொண்டிருப்பாராதலால், 'தூய சொல்லாட்டு' என்பதொன்றனையே கூறினர். மடி-வயிறு. அஃது ஆகுபெயராய் வயிற்றைப் பொருந்தும் பிறப்பை உணர்த்தி நின்றது. 'பூயல்' என்பதன் யகரம் சகரத்திற்குப் போலியாய் நின்றது. "சேரு" என்றும் பாடம். (அ)

க. கடன்முகந்து தீம்பெயலை யூழ்க்கு மெழிலி
மடனுடையார் கோதகற்றி மாண்புறுத்த லேமம்
படைத்தாக்கல் பண்பறிந்தோர் சால்பு.

அநுவயம் :—எழிலி கடல் முகந்து தீம் பெயலை ஊழ்க்கும்; பண்பு அறிந்தோர் சால்பு மடனை உடையார் கோதை அகற்றி மாண்பு உறுத்தலும் ஏமத்தைப் படைத்து ஆக்கலுமாம்.

பதவுரை :—எழிலி-மேகமானது, கடல் முகந்து-கடலிலுள்ள உப்புநீரை மொண்டு, தீம்பெயலை ஊழ்க்கும்-(அதன்கண்ணுள்ள உப்பை யெல்லாம் மாற்றிப் பல உயிர்களையும் பாதுகாக்கும்பொருட்டு) இனிய மழையைச் சொரியும்; (அதுபோல), பண்பு அறிந்தோர்-ஒழுக்க நெறியை அறிந்தோரது, சால்பு-சால்பானது, மடன் உடையார்-மடமையை யுடையாரது, கோது அகற்றி-குற்றங்களைத் தெரிந்து போக்கி,

மாண்பு உறுத்தல்-அவருக்கு நற்குணங்களை அறிவுறு த்தலும், ஏமம் படைத்து ஆக்கல்-பாதுகாப்பைச் செய்து வளர்த்தலுமாம்.

பொழிப்புரை:—மேகமானது கடலிலுள்ள உப்பு நீரை மொண்டு (அதன் கண்ணுள்ள உப்பையெல்லாம் மாற்றிப் பல உயிர்களையும் பாதுகாக்கும்பொருட்டு) இனிய மழையைச் சொரியும்; (அதுபோல), ஒழுக்க நெறியை அறிந்தோரது சால்பானது மடமையை யுடையாரது குற்றங்களைத் தெரிந்து போக்கி அவரு க்கு நற்குணங்களை அறிவுறுத்தலும் பாதுகாப்பைச் செய்து வளர்த்தலுமாம்.

கருத்துரை:—அறிஞர்களது கடமை, அறிவில்லா தவர்களது குற்றங்களைப் போக்கி, அவர்களுக்கு நற்கு ணங்களை அறிவுறுத்தி ஏமம் நல்குதலே.

விசேடவுரை:—ஒருவரது குற்றங்களை நீக்குதல் அவரது பிறப்பினை யொழித்தற்கு ஏதுவாம். அது பற்றியே மடனுடையார் குற்றங்களை நீக்கி அவருக்கு நற்குணங்களை அறிவுறுத்துதல் பண்பினை அறிந்தோர் சால்பு என்றனர். மேகத்தினது செயலை இங்குக் குறித்தது பிரதிப்பிரயோசனத்தைக் கருதாமலே பிற ருக்கு உதவி புரியவேண்டு மென்பதற்கே. 'உறுத்த லும்' 'ஆக்கலும்' என்பவை எண்ணும்மை தொக்கு நின்றன. இவ்வெண்பா மூன்றடியால் வந்தமையின், சிந் தியல் வெண்பாவாகும், "நேரிசை யின்னிசை போல நடந்தடி மூன்றின்வந்தால், நேரிசை யின்னிசைச்

சிந்திய லாகும்" என்பது யாப்பருங்கலக்காரிகை யாதலின். (கூ)

௧. இடிப்பதென் றெண்ணி யிறைவானைக் காயார்
முடிப்ப ருயிரெனினு முன்னார்—கடிப்பக்
கன்றமர்ந்து தீம்பால் கலுழுமே நீண்மோத்தை
யொன்ற வுணரா தா ரூங்கு.

அநுவயம்:—இடிப்பது என்று எண்ணி இறையும் வானைக் காயார்; உயிரை முடிப்பர் எனினும் முன்னார்; கன்று அமர்ந்து கடிப்பத் தீம்பாலைக் கலுழும்; ஒன்ற உணராதாரின் நீள் மோத்தை ஊங்கு.

பதவுரை :—இடிப்பது என்று எண்ணி-செவிடு படும்படி இடியிடிக்கின்றது என்று நினைத்து, இறை வானை காயார்-மழையைப் பெய்கின்ற மேகத்தை (உழவர்) வெறுக்கார்; (அது போல), உயிர் முடிப்பர் எனினும்-தமது உயிரை (ச்சிறியார்) நீக்குவரெனினும், முன்னார்-அவர் உயிரை நீக்க (ப்பெரியார்) நினையார்; கன்று அமர்ந்து கடிப்ப-கன்று பக்கத்து இருந்து மடியினைக் கடிக்கவும், தீம் பால் கலுழும்-அதற்கு மதுரமான பாலை (த்தாய்) அளிக்கும்; (அது போல), ஒன்ற உணராதார்-(தமக்குத் துன்பம் செய்தார்க்கும் தாம் இன்பம் செயலைப்) பொருந்த அறியாதாரினும், நீள் மோத்தை-முதிர்ந்த ஆட்டுக் கடாக்கள், ஊங்கு-சிறந்தனவாம்.

பொழிப்புரை :—செவிடுபடும்படி இடிகளை இடிக்கின்றதென்று நினைத்து மழையைப் பெய்கின்ற மேக

த்தை (உழவர்) வெறுக்கார்; (அது போல), தமது உயிரைச் சிறியார் நீக்குவரெனினும் அவர் உயிரை நீக்க (ப்பெரியார்) நினையார்; கன்று பக்கத்து இருந்து மடியினைக் கடிக்கவும் அதற்கு மதுரமான பாலை (த்தாய்) அளிக்கும்; (அதுபோல), (தமக்குத் துன்பம் செய்தார்க்கும் இன்பம் செய்தலைப்) பொருந்த அறியாதாரினும் முதிர்ந்த ஆட்டுக் கடாக்கள் சிறந்தனவாம்.

கருத்துரை :—தமக்குப் பிறர் தீங்கிழைப்பினும் தாம் அவருக்கு நன்றே புரிதல் வேண்டும்.

விசேடவுரை :—ஆட்டுக்கடாக்கள் சில காரியங்களுக்குப் பயன்படுதல் பற்றி, அவை சிறந்தன வென்றார். " தம்முயிர் நீப்பினும் செய்பற்க தான்பிறி, தின்னுயிர் நீக்கும் வினை ".—திருக்குறள். " இன்னாசெய் தார்க்கும் இனியவே செய்யாக்கால், என்ன பயத்ததோ சால்பு".—திருக்குறள். "சாந்தனையும் தீயனவே செய்திடினும் தாமவரை, ஆந்தனையும் காப்பர் அறிவுடையோர்—மாந்தர், குறைக்குந் தனையும் குளிர்நிழலைத் தந்து, மறைக்குமாம் கண்டீர் மரம்".—நல்வழி. கன்று அமர்ந்து கடிப்பத் தீம்பால் கலுழும் என்றதனால் 'தாய்' என்பது சொல்லெச்சமாக வருவிக்கப்பட்டது. (௭)

அறப்பால் முற்றிற்று.

---

# பொருட்பால்.

'பொருட்பால்' என்பது 'பொருளைப்பற்றிக் கூறும் பகுதி' என்று பொருள்படும். அறத்தையும் இன்பத்தையும் மாத்திரம் தருதலால், பொருட்பால் அறப்பாலின்பின் கூறப்பட்டது.

௧௪. உண்மையோராப் பித்த ருடைமை மயக்கென்ப
வண்மை யுறலூக்க லொருதலையே—கண்ணீ
ரிருபாலுந் தோன்றன்ன வீர்க்கலார் போழ்வா
ளிருபா லியங்கலினோ டொப்பு.

அநுவயம்:—உண்மையை ஓராத பித்தர் உடைமையை மயக்கு என்ப; (ஒவ்வொருவரும்) வண்மையை உற ஒருதலையே ஊக்கல்; (உடைமைகள்) கண்ணினது நீர் இருபாலும் தோன்றல் அன்ன; (அது) ஈர்க்கல் ஆர் போழ்வாள் இருபாலும் இயங்கலினோடு ஒப்பு.

பதவுரை:—உண்மை ஓராத பித்தர்-(பொருள்களின்) உண்மையான தன்மையை அறியாத பைத்தியக்காரர், உடைமை மயக்கு என்ப-செல்வங்களை மயக்கத்திற்குக் காரணமென்று கூறுவர்; வண்மை உற ஒருதலையே ஊக்கல்-(ஒவ்வொருவரும்) செல்வங்களை அடைய உறுதியாகவே முயல்க: (உடைமைகள்) கண் நீர் இருபாலும் தோன்றல் அன்ன-(உடைமைகள்) கண்களின் பார்வை இரண்டு பக்கங்களிலும் தோன்றுதல் போன்றவை; ஈர்க்கல் ஆர் போழ்வாள் இருபால் இயங்கலினோடு ஒப்பு-(அவை) இழுத்

தலைப் பொருந்திய போழ்வாள் இரண்டு பக்கங்களி லும் ஒளிர்தலினோடு ஒப்பாகும்.

பொழிப்புரை :—(பொருள்களின்) உண்மையான தன்மையை அறியாத பைத்தியக்காரர் செல்வங்களை மயக்கத்திற்குக் காரண மென்று சொல்லுவர்; (ஒவ் வொருவரும்) செல்வங்களை அடைய உறுதியாகவே முயல்க; (உடைமைகள்) கண்களின் பார்வை இரண்டு பக்கங்களிலும் தோன்றுதல் போன்றவை; (அவை) இழுத்தலைப் பொருந்திய போழ்வாள் இரண்டு பக்கங் களிலும், ஒளிர்தலினோடு ஒப்பாகும்.

கருத்துரை :—பொருள் வீட்டிற்கு நேர் நெறியா கிய அறத்திற்கு இன்றியமையாத தொன்றுதலால், அதனை ஈட்டுதற்கு இடைவிடாது முயல்க.

விசேடவுரை :—கண்களின் பார்வை இரண்டு பக் கங்களிலும் தோன்றினாலும், அவை உண்மையில் ஒரு பக்கத்திலேயே நோக்கும்; மரத்தை அறுக்கின்ற வாள் கள் இரண்டு பக்கங்களிலும் ஒளிர்ந்தாலும், அவை உண்மையில் ஒரு பக்கத்திலேயே அறுக்கும். அது போல, செல்வங்கள் மயக்கத்திற்குக் காரண மாகவும் முத்திநெறியாகிய அறத்திற்குக் காரணமாகவும் தோன் றினாலும், அவை உண்மையில் அறத்தைச் செய்வத ற்கே பயன்படும். "ஈட்டலும் துன்பமற் றீட்டிய ஒண்பொருளைக், காத்தலும் ஆங்கே கடுந்துன்பம்— காத்தல், குறைபடின் துன்பம் கெடின்துன்பம் துன் புக், குறைபதி யூர்றைப் பொருள்" என்று பொருளை

இழித்துக் கூறுவர் காலடியார். "செய்தபொருள் யாரும் செறுவாரைச் செறுகிற்கும், எஃகுபிறி தில்லை இருந் தேயுபி ரையுண்ணும், ஐயமிலை யின்பமறஞேடு வையு மாக்கும், பொய்யில்பொரு ளேபொருள் மற்றல்ல பிற பொருளே" என்று பொருளைச் சிறப்பித்துக் கூறினர் சீவகசிந்தாமணியுடையார். 'ஓரா' என்பது முதல் குறைகின்றது. 'மயக்கு' என்பது ஆகுபெயராய் அதன் காரணத்தை உணர்த்திநின்றது. 'தோன்ற லன்ன' என்பது 'அல்'விகுதி கெட்டுநின்றது. நான் காம் அடியில் 'இருபாலும்' என்பது உம்மை கெட்டு நின்றது. (க)

௳௨. உடைமையரு தீட்ட லுறுதுணையாம் யாண்டு
முடைமையராச் சென்றக்கா லூரெல்லாஞ் சுற்ற
முடைமைக்கோ லின்றங்குச் சென்றக்காற் சுற்ற
முடையவரும் வேறு படும்.

அநுவயம் :—உடைமையை அருது ஈட்டல்; அது யாண்டும் உறு துணையாம்; உடைமையராகச் சென்றக் கால் ஊர் எல்லாம் சுற்றம்; உடைமைக்கோல் இன்று அங்குச் சென்றக்கால் சுற்றம் உடையவரும் வேறுப டும்.

பதவுரை :—உடைமை - (ஒருவர்) செல்வத்தை, அருது-இடைவிடாது, ஈட்டல்-சம்பாதிக்கக் கடவர்; யாண்டும்-எவ்விடத்தும், உறு துணையாம்-(அவருக்கு அஃது) உற்ற துணையாம்; உடைமையராக-(ஒருவர்) செல்வம் உடையவராக, சென்றக்கால்-அயலூருக்குப்

போனால், ஊரெல்லாம்-(அவ்) ஊராரெல்லாம், சுற்றம்-(அவருக்குச்) சுற்றமாவர்; உடைமைக்கோல்-செல்வமாகிய ஊன்றுகோல், இன்று-இல்லாமல், அங்கு-அவ்வயலூருக்கு, சென்றக்கால்-(ஒருவர்) போனால், சுற்றம் உடையவரும்-(அவருக்கு) உறவுடையவரும், வேறுபடும்-வேறாவர்.

பொழிப்புரை :—(ஒருவர்) செல்வத்தை இடைவிடாது சம்பாதிக்கக் கடவர்; எவ்விடத்தும் (அவருக்கு அஃது) உற்ற துணையாம்; (ஒருவர்) செல்வமுடையவராக (அயலூருக்குப்) போனால், அவ்வூராரெல்லாம் (அவருக்குச்) சுற்றமாவர்; செல்வமாகிய ஊன்றுகோல் இல்லாமல் அவ்வயலூருக்கு (ஒருவர்) போனால் (அவருக்கு) உறவுடையவரும் வேறாவர்.

கருத்துரை :—செல்வமே இடருற்ற காலத்தும் தூரதேசம் சென்ற காலத்தும் உண்மையான துணையாம். ஆதலால், ஒவ்வொருவரும் இடைவிடாமல் மேலும் மேலும் செல்வத்தை ஈட்டுக.

விசேடவுரை :—பெருஞ்செல்வம் இடையறாது ஈட்டலினாலேயே ஆகுமென்பதை "ஆக்கமிங் கொருவரால் அணுக வேண்டுமேல், ஊக்கமுண் டாவரேல் உறுவர் அன்னது, நீக்கமில் கொள்கையின் நிற்பரேயெனின், மேக்குறும் பெருந்திரு விரைவின் மேவுமால்" என்னும் கந்தபுராணச் செய்யுளாலும், செல்வம் உறுதுணை யென்பது "அளப்பரும் விஞ்சையே யன்றி மேன்மையும், உளப்படு தன்மையும் உயர்ந்த

சீர்த்தியும், கொளப்படு கொற்றமும். பிறவும் கூட்டலால், வானத்தினிற் சிறந்தது மற்றொன்றில்லையே" என்னும் கந்தபுராணச்செய்யுளாலும் அறிக. செல்வமுடையவருக்கு எல்லாரும் சுற்றமாவ ரென்பதை "காலாடு போழ்தில் கழிகிளைஞர் வானத்து, மேலாடு மீனின் பலராவர்" என்னும் நாலடியாலும், செல்வமில்லாதவருக்குத் தமது சுற்றத்தாரும் வேறாவர் என்பதை "அறஞ்சாரா நல்குர வீன்றதா யானும், பிறன்போல நோக்கப் படும்" என்னும் திருக்குறளாலும் அறிக. 'சென்றக்கால்' என்றதால் 'அயலூர்' என்பது வருவிக்கப்பட்டது. (உ)

௩. மண்ணீ ருடையார் வழங்கிச் சிறுகாலைத்
தண்ணீரார் சாரு நிலஞ்சார்வ—ருண்ணீ
ரறியி னருஞ்செவிவி மாண்பொருளே வெண்
சிறியுரையு மேர்ப்படுத்துஞ் செய். [ணீர்ச்

அநுவயம்:—மண்நீர் உடையார் வழங்கித் தண்ணீரார் சாரும் நிலத்தைச் சிறுகாலைச் சார்வர். உள்நீர் அறியின் அருஞ்செவிவி மாண்பொருளே; (அது) வெள்நீர்ச் சிறியரையும் ஏர்ப்படுத்தும்; (ஆதலால், அதனைச்) செய்.

பதவுரை:—மண்நீர் உடையார்-தோட்டம் துரவுகளை உடையவர், வழங்கி-இல்லாதார்க்கு வேண்டுவன வெல்லாம் ஈந்து, தண்ணீரார் சாரும்-அருளினையுடையார் அடையும், நிலம்-மோக்ஷவுலகத்தை, சிறுகாலை-விரைவில், சார்வர்-அடைவர். உள்நீர் அறியின்-உண்

மையான தன்மையை அறியுங்கால், அருஞ்செவிலி- (அருளினை வளர்க்கும்) அரிய வளர்ப்புத்தாய், மாண் பொருளே - மாட்சிமைப்பட்ட நெறியில் வந்த செல்வமே; (அது) வெள்ளீர் சிறியரையும் - வெண்மையை உடைய அற்பரையும், ஏர்ப்படுத்தும்- (அறிவுடையாராக்கி) அழகுபடுத்தும்; செய்-(ஆதலால், அதனைச்) செய்வாயாக.

பொழிப்புரை :—தோட்டம் துரவுகளை உடையவர், இல்லாதார்க்கு வேண்டுவன வெல்லாம் ஈந்து, அருளினையுடையார் அடையும் மோக்ஷவுலகத்தை விரைவில் அடைவர். உண்மையான தன்மையை அறியுங்கால், (அருளினை வளர்க்கும்) அரிய வளர்ப்புத்தாய், மாட்சிமைப்பட்ட நெறியில் வந்த பொருளே; (அது) வெண்மையையுடைய அற்பரையும் (அறிவுடையராக்கி) அழகுபடுத்தும்; (ஆதலால் அதனைச்) செய்வாயாக.

கருத்துரை.—செல்வம் மோக்ஷத்தையும் சிறப்பையும் நல்கும்.

விசேடவுரை :—தோட்டம் துரவுகளைக்கொண்டு உழவு தொழில் செய்வோர் இல்லாதார்க்கு ஈவரென்பது "இரவார் இரப்பார்க்கொன் றீவர் கரவாது, கைசெய்தூண் மாலை யவர்" என்னும் திருக்குறளாலும், இல்லாதார்க்கு ஈதல் மோக்ஷத்தை அளிக்குமென்பது "கொடையே யெவர்க்கும் எப்பேறும் கொடுக்கும்" என்னும் காஞ்சிப்புராணச் செய்யுளாலும், பொருள்

அருளினை வளர்க்கும் வளர்ப்புத்தாயென்பது "அரு ளென்னும் அன்பின் குழவி பொருளென்னும்,செல்வச் செவிலியால் உண்டு" என்னும் திருக்குறளாலும் விள க்கும். மண், நீர் என்பன ஆகுபெயராய் முறையே தோட்டத்தையும் தூரவையும் உணர்த்தி நின்றன (௩)

௰௪. மெய்வலியுஞ் சென்னிலையும் வாழ்நாளுந் தூவொழுக்கு
மெய்யா வளிக்கும் வெறுக்கையிலார்-வையத்துப்
பல்கிளையும் வாடப் பணையணைதோள் சேய்திரங்க
வொல்குயிர்நீத் தாரு நரகு.

அநுவயம் :—வெறுக்கை மெய்வலியையும் செல் நிலையையும் வாழ்நாளையும் தூஒழுக்கையும் மெய்யாக அளிக்கும். (அஃது) இலார் வையத்துப் பல்கிளையும் வாடப் பணையணை தோளும் சேயும் திரங்க ஒல்கும உயிரை நீத்து நரகுள் ஆரும்.

பதவுரை .—வெறுக்கை-செல்வம், மெய் வலியும்-சரீர பலத்தையும், செல் நிலையும்-சொல்செல்லும் நிலைமையையும், வாழ்நாளும்-பூரண ஆயுளையும், தூ ஒழுக்கும்-தூய ஒழுக்கத்தையும், மெய்யாக அளிக் கும்-உண்மையாகக் கொடுக்கும்; இலார்-(அஃது) இல் லாதார், வையத்து-இவ்வுலகின்கண், பல்கிளையும் வாட-தமது பல உறவினரும் வருந்தவும், பணையணை தோள்சேய் திரங்க-பருமை பொருந்திய தோள்களை யுடைய மனையாளும் மக்களும் மெலிவுறவும், ஒல்கு உயிர்-தளரும் (தம்) உயிரை, நீத்து-விட்டு, நரகு ஆரும்-(மறுமையின்கண்) நரகத்தில் புகுவர்.

பொழிப்புரை :—செல்வம் சரீர பலத்தையும், சொல் செல்லும் நிலைமையையும், பூரண ஆயுளையும், தூய ஒழுக்கத்தையும் உண்மையாகக் கொடுக்கும். (அஃது) இல்லாதார் இவ்வுலகின்கண் (தமது) பல உற வினரும் வருந்தவும், பருமை பொருந்திய தோள்களையு டைய மனையாளும் மக்களும் மெலிவுறவும், தளரும் (தம்) உயிரைவிட்டு (மறுமையின்கண்) நரகத்தில் புகுவர்.

கருத்துரை :—செல்வம் இம்மைக்கு வேண்டும் சரீரபலம், செல்வாக்கு, பூரணஆயுள் முதலியவற்றை யும், மறுமைக்கு வேண்டும் தூயஒழுக்கம் முதலிய வற்றையும் நல்கும். தரித்திரம் இம்மையில் தமக்கும் தமது மனைவிமக்களுக்கும் பலவகைத் துன்பங்களைக் கொடுத்து மறுமையில் நரகத்தையும் கொடுக்கும்.

விசேடவுரை :—செல்வம் எல்லா மேம்பாட்டை யும் கொடுக்குமென்பது "வென்றி யாக்கலும் மேதக வாக்கலும், குன்றி னோர்களைக் குன்றென வாக்கலும், அன்றி யுங்கல்வி யோடழ காக்கலும், பொன்றுஞ் சாகத்தி னய்பொருள் செய்யுமே" என்னும் சீவகசிந் தாமணியாலும், செல்வ மில்லாதார் இம்மையில் பல வகைத் துன்பங்களையும் அடைந்து மறுமையில் நரகத் தில் புகுவரென்பது "நல்குர வென்னும் நசையினுட் பல்குறைத், துன்பங்கள் சென்று படும்," "இன்மை யெனவொரு பாவி மறுமையும், இம்மையும் இன்றி வரும்" என்னும் திருக்குறள்களாலும் விளங்கும்.

'தோள்' என்பது சினையாகுபெயர். 'மெய்யாக' என்பது ஈறு கெட்டு நின்றது. (௪)

௫. குருட்டாயன் நீள்கானங் கோடல் சிவணத்
தெருட்டாயங் காலத்தாற்சேரான்-பொருட்டாகா
னல்லறமும் பேணு னார மிவர்த்தானும்
பொல்லாங் குறைவிடனும் புல்.

அநுவயம்:—காலத்தால் தெருட்டு ஆயத்தைச் சேரான், குருட்டு ஆயன் நீள் கானத்தைக் கோடலைச் சிவண, பொருட்டாகானும்; நல்லறமும் பேணானும்; நாரம் இவர்த்தானும்; பொல்லாங்கு உறைவு இடனும், புல்.

பதவுரை :—காலத்தால்-இளம் பருவத்தில், தெருட்டு ஆயம் சேரான்-கல்வி அறிவை அடைவதற்கு ஏதுவாகிய பொருள்வருவாயைப் பொருந்தாதவன், குருட்டு ஆயன்-குருட்டு இடையன், நீள் கானம்-பெரிய காட்டினை, கோடல் சிவண-அடைதலை ஒப்ப, பொருட்டு ஆகான் ஆம்-ஒரு பொருளாக மதிக்கப்படாதவனுவன்; நல் அறமும் பேணனும்-நல்ல அறத்தையும் பேணாதவனுவன்; நாரம் இவர்த்தானும்-சுற்றத்தை இழந்தவனுவன்; பொல்லாங்கு - துன்பங்களெல்லாம், உறைவு இடன் ஆம்-தங்குவதற்குரிய இடமாவன். புல்-ஆதலால், அவன் அற்பனேயாவன்.

பொழிப்புரை:—இளம்பருவத்தில் அறிவை அடைவதற்கு ஏதுவாகிய பொருள்வருவாயினைப் பொருந்தாதவன், குருட்டிடையன் பெரிய காட்டினை அடை-

தலை ஒப்ப, ஒரு பொருளாக மதிக்கப்படாதவனுவன்; நல்ல அறத்தையும் பேணுதவனுவன்; சுற்றத்தை இழந்தவனுவன்; துன்பங்களெல்லாம் தங்குவதற்குரிய இடமாவன். ஆதலால், அவன் அற்பனேயாவன்.

கருத்துரை :—செல்வமில்லாதான் ஒருவராலும் மதிக்கப்படான், அறம் செய்யமாட்டான், சுற்றத்தாரையிழப்பான், துன்பங்களெல்லாம் பொருந்தும் இடமாவன். ஆதலால், அவன் அற்பனே.

விசேடவுரை:—பெரிய காட்டின்கண் புக்க குருட்டிடையன் தனது ஆட்டை அடையாதவனுயும் தனது மேய்த்தற் றெழிலை இழந்தவனுயும் பல துன்பங்களையுடையவனுயும் தனித்து வருந்துதல்போல, இளம் பருவத்தில் பொருள்வருவாயை அடையாதவன் ஒரு பொருளாக மதிக்கப்படாதவனுயும் அறம் செய்யாதவனுயும் சுற்றத்தை இழந்தவனுயும் துன்பங்களை யெல்லாம் பொருந்தி அற்பனுய் வருந்துவன். 'பொருட்டாகான்' என்பது பால்வழுவமைதி. 'தாரம்' என்பது ஆகுபெயர், அதனையுடைய சுற்றத்திற் காயினமையால். (ரு)

௬. முப்பொரு ளுண்மை தெளிவா னருஞ்சீலன்
முப்பொரு ளுண்மை யுடையா னருமுனிவன்
முப்பொரு ளுண்மை மடுப்பா னிறையாங்கு
முப்பொரு ளுண்மைக் கிறை.

அநுவயம் :—முப்பொருளினது உண்மையைத் தெளிவான் அருஞ்சீலன்; முப்பொருளினது உண்மை

யை உடையான் அருமுனிவன்; முப்பொருளினது உண்மையை மடுப்பான் இறை; முப்பொருள் உண்மைக்கு இறை.

பதவுரை :—முப்பொருள் உண்மை தெளிவான்-அறம் பொருள் இன்பம் என்னும் மூன்று பொருள்களினது இயல்புகளை அறிபவன், அருஞ்சீலன்-அரிய ஒழுக்கத்தை யுடையவனுவான்; முப்பொருள் உண்மை உடையான்-அம்மூன்று பொருள்களினது இயல்புகளை அறிந்தவன், அரு முனிவன்-அரிய முனிவனுவான்; முப்பொருள் உண்மை மடுப்பான்-அம்மூன்று பொருள்களினது உடைமையை அநுபவிப்பவன், இறை-அரசனுவான்; முப்பொருள்-அம்மூன்று பொருள்களும், உண்மைக்கு-மெய்ப்பொருளுக்கு, இறை-இருப்பிடமாம்.

பொழிப்புரை :—அறம் பொருள் இன்பம் என்னும் மூன்று பொருள்களினது உண்மை இயல்புகளை அறிபவன், அரிய ஒழுக்கத்தை உடையவனுவான்; அம்மூன்று பொருள்களினது உண்மை ஞானத்தையுடையவன் அரிய முனிவனுவான்; அம்மூன்று பொருள்களின் உண்மையைக் கைக்கொண்டவன் அரசனுவான்; அம்மூன்று பொருள்களும் மெய்ப்பொருளுக்கு இருப்பிடமாம்.

கருத்துரை:—அறம், பொருள், இன்பம் என்னும் மூன்றின் இலக்கணங்களையும் உணர்ந்து நடப்பவர் ஒழுக்கம் முதலிய நன்மைகளை அடைவர்.

விசேடவுரை :—முப்பொருள் என்பது அறம்பொருளின்பங்களையே குறித்து நின்றதென்பது " கண்டவர் கூடுமுறாஉம் காமருசீர் காதிற், குண்டலம் பெய்வ செவியல்ல-கொண்டுலகில், மூன்று முணர்ந் தவற்றின் முன்னது முட்டின்றிச், சூன்று சுவைப்ப செவி" என்னும் அறநெறிச்சாரத்தால் விளங்கும். 'அருஞ்சிலன்' என்பது இல்வாழ்க்கையில் நிற்பவனைக்குறித்து நின்றது, 'முனிவன்' பின் கூறப்படுகின்றானாதலால். அரசன் முனிவனுக்கும பின் கூறப்பட்டான, அவன் அனைவாக்கும மேற்பட்டவனாதலால் அது " குலமகட்குத் தெய்வம் கொழுநனே மன்ற, புதல்வர்க்குத் தந்தையும் தாயும்—அறவோர்க், கடிகளே தெய்வம் அனைவோர்க்கும் தெய்வம், இலைமுகப் பைம்பூண் இறை" என்னும் நீதிநெறிவிளக்கத்தால் காணப்படும். 'ஆங்கு' என்பது அசை. (௬)

௭. காலகலத்தாற்சேர்பொருளுங்கண்ணற்றார்தேர்பொருளு
நாலிரண்டாற கூடு நலப்பொருளு—கோல்தாங்கிக்
கோடு மரசிற் குரியாமே தொல்புவிக்கீ
ழாடும் பொருளோ டணைந்து.

அநுவயம் :—காலாலும் கலத்தாலும் சேரும் பொருளும், கண்அற்றார் தேரும் பொருளும், நால் இரண்டால் கூடும நலம் பொருளும், தொல்புவியின் கீழ் ஆடும் பொருளோடு அணைந்து, கோல்த் தாங்கிக் கோடும் அரசிற்கு உரியவாமே ?

பதவுரை :—கால் கலத்தால்-(நிலத்தின்மீது செல்

கின்ற) வண்டி முதலியவற்றாலும (நீரின்மீது செல்லு கின்ற) கப்பல் முதலியவற்றாலும், சேர் பொருளும்- கூடும சுங்கப்பொருள்களும், கண் அற்றார்-அறிவில் லாதவர், தேர் பொருளும்-அடையும் பொருள்களும், நால் இரண்டால் கூடும்-(குடிகளின் வருவாயில்) ஆறி லொன்றாகக் கொள்வதால் சேரும், நலம் பொருளும்- நன்மையமைந்த இறைப்பொருள்களும், தொல் புவிக் கீழ்-பழமையான புவியின்கீழே, ஆடும் பொருளோடு அணைந்து-தங்கும் பொருள்களோடு சேர்ந்து, கோல் தாங்கி கோடும்-அரசாட்சியைத் தாங்கி நீதிதவறி நடக் கும், அரசிற்கு உரியவாமே -. அரசனுக்கு உரியன வாமோ?

பொழிப்புரை :—(நிலத்தின்மீது செல்கின்ற) வண்டி முதலியவற்றாலும் (நீரின்மீது செல்கின்ற) கப் பல் முதலியவற்றாலும் கூடும் சுங்கப்பொருள்களும், அறிவில்லாதார் அடையும் பொருள்களும், (குடிகளின் வருவாயில்) ஆறிலொன்றாகக் கொள்வதால் சேரும் நன்மையமைந்த இறைப்பொருள்களும், பழமையான புவியின்கீழே தங்கும் பொருள்களோடு சேர்ந்து, செங்கோலைத் தாங்கி நீதிதவறி நடக்கும் அரசனுக்கு உரியனவாமோ?

கருத்துரை :—இந்நால்வகைப் பொருள்களையும் கொடுங்கோலரசன் இழப்பன்.

விசேடவுரை :—“ உறுபொருளும் உல்கு பொரு ளும்தன் ஒன்னார்த், தெறுபொருளும் வேந்தன்

பொருள்" என்றார் பொய்யாமொழியார். 'உறு பொருள்' என்பது கண்ணற்றார் பொருளும், புவிக்கீழ்ப் பொருளும், இறைப் பொருளுமாம். 'உல்குபொருள்' சுங்கப்பொருளாம் அறிவில்லாதார் பொருளைப் பெற்றிருத்தலால் அவர்க்கும் பிறர்க்கும் தீங்கே விளையுமாதலால், அவர்பொருளும் அரசிற்கு உரியதாயிற்று. அதுபற்றியே "கல்லான் வெகுளும் சிறுபொருள் எஞ்ஞான்றும், ஒல்லானை ஒல்லா தொளி" என்றார் பொய்யாமொழியார். "தொல்புவி" என்றதனால் உரியாரில்லாத பொருளொன்றும், காப்பதன் நிமித்தமாக நிலத்தின்கீழ் உரியார் புதைத்து வைத்திருக்கும் பொருளன்றென்றும் அறிக. 'உரியவரமே' என்பது 'உரியாமே' என விகாரப்பட்டு நின்றது. ஏகாரம் எதிர்மறை. 'கால்' என்பது இருமடியாகுபெயர், காலையுடைய எருது முதலியவற்றால் இழுக்கப்படும் வண்டி முதலியவற்றிற்கு ஆயினமையால். (எ)

அ ஆம்போம் வினையா னிணைவுற்ற பேர்வெறுக்கை
யோம்போம் பெனமறை கூறத் தலைப்பெயலென்
னேம்போ மெனவரைத லீட்டுநெறி தேராமை
சாம்போழ் தலறும் தகைத்து.

அநுவயம்:—"(பொருள்) வினையான் ஆம், போம்; (அஃது) இணைவு உற்ற பேர் வெறுக்கை; (அதனை) ஓம்பு ஓம்பு என மறை கூற (வும்) அதனைத் தலைப்பெயல் என்? (அதனால்) ஏம்போம்" எனவரைதல் ஈட்டும் நெறியைத் தேராமை. (அது) சாம்போழ்து அலறும்

தகைத்து.

பதவுரை:—"(பொருள்) வினையான் ஆம் போம்-செல்வம் (ஒருவரது) நல்வினையால் உண்டாகும் தீவினையால் நீங்கும்; (அஃது) இணைவுற்ற பேர் வெறுக்கை-அது பொருந்திய பெயரோ வெறுக்கை; (அதனை) ஓம்பு ஓம்பு-அதனை விலக்கு விலக்கு, என மறை கூற (வும்)-என்று வேதங்கள் சொல்லவும், (அதனைத்) தலைப்பெயல் என்-அதனை ஈட்டுதல் யாது காரணம்? (அதனால்) ஏம்போம்-அதனை ஈட்டுதலால் களிப்படையோம்," என வரைதல்-என்று (ஒருவர் பொருளீட்டுந் தொழிலை) விலக்குதல், ஈட்டும் நெறி தேராமை-பொருளைத் தொகுக்கும் வழியை அறிமையாம். (அது) சாழ்போழ்து-அவ்வறியாமை (அவர்) சாகும் பொழுது, அலறும் தகைத்து-தமது (மனைவி மக்களின் பாதுகாப்புக்கு ஒன்றும் இல்லையே என்று) அழுதற்குரிய தன்மையை யுடைத்து.

பொழிப்புரை:—"செல்வம் (ஒருவரது) நல்வினையால் உண்டாகும், தீவினையால் நீங்கும்; அது பொருந்திய பெயரோ வெறுக்கை; அதனை 'விலக்கு விலக்கு' என்று வேதங்கள் சொல்லவும், அதனை ஈட்டுதல் யாது காரணம்? அதனை ஈட்டுதலால் களிப்படையோம்" என்று (ஒருவர்) பொருளீட்டும் தொழிலை விலக்குதல், பொருளைத் தொகுக்கும் வழியை அறியாமையாம். அவ்வறியாமை (அவர்) சாகும்பொழுது (தமது மனைவி மக்களின் பாதுகாப்புக்கு ஒன்றும் இல்

லேயேயென்று) அழுதற்குரிய தன்மையை யுடைத்து.

கருத்துரை :—தக்க பருவத்திலே பொருளை ஈட்டிக்கொள்ளாதார் சாம் காலத்துத் தமது மனைவி மக்கள் சம்ரக்ஷணைக்கு ஒன்றும் இல்லையே யென்று அலறி யழ நேரிடும்.

விசேடவுரை :—'வெறுக்கை' என்பது 'செல்வம்' எனவும் 'வெறுக்கத்தக்கது' எனவும் பொருள்படும். அஃது இங்குப் பிந்திய பொருளிற் கூறப்பட்டுள்ளது. "ஆம்" என்பதுமுதல் "ஓம்பு ஓம்பு" என்பதுஇறுதியாகவுள்ள சொற்கள், மறையினத்து சொற்கள். "ஆம்" என்பது முதல் "ஏம்போம்" என்பது இறுதியாகவுள்ள சொற்கள், பொருளை ஈட்டுநெறியை அறியாதார் சொற்கள். முன்னை வினையால் செல்வம் சேருமென்பதும நீங்குமென்பதும் "நடுக்குற்றுத் தற்சேர்ந்தார் துன்பம் துடையார், கொடுத்துத்தான் துய்ப்பினும் ஈண்டுங்கால் ஈண்டும், மிடுக்குற்றுப் பற்றினும் நில்லாது செல்வம், விடுக்கும் வினைவந்தக் கால்" மன்னும் நாலடியால் விளங்கும். "செல்வம் வெறுக்கத்தக்கதென்பது "பொருவரு பந்தமெல்லாம் புணர்த்திடும் தெய்வசிந்தை, ஒருவமே விட்டுநிற்கும் உறக்கமும் இறக்கச்செய்யும், கருவினுட் புகுத்து மின்ன கரிசுகண்டதனு லன்றோ, இருநிலத் திடைவெறுக்கை யென்மனோர் புலமைசான்றோர்" என்ற குசேலோபாக்கியானத்தால் விளங்கும். பொருளில்லாதான் எஞ்ஞான்றும் துன்ப முறுவனென்பது "வடுவிலா வையத்து மன்

னிய மூன்றில், நடுவண தெய்த இருத்லேயு மெய்தும், நடுவண தெய்தாதான் எய்தும் உலேப்பெய், தடுவது போலும் துயர்" என்னும் நாலடியால் விளங்கும். 'கூற வும்' என்பது உம்மை எஞ்சி நின்றது. (அ)

௨௯. பட்டாங்குத் தூயர் பழிச்சற் குரியரா
வொட்டின் றுயர வுலகத்தோர்-கட்டளை
யாம்வெறுக்கை யின்றி யமையாரா மஃதிலார்
ரும்வெறுக்கை நிற்க வுடம்பு. [மையாவின்

அநுவயம் :—பட்டாங்குத் தூயரும் பழிச்சற்கு உரியராய் ஒட்டு இன்று உயர உலகத்தோர் கட்டளை யாம் வெறுக்கை இன்றி அமையாராம். அஃது இலா ரது உடம்பு மையாவின் நிற்க (அதன்மீது) வெறுக்கை ஆம்.

பதவுரை :—பட்டாங்கு-மெய்யாக, தூயரும்-துற விகளும், பழிச்சற்கு-துதித்தற்கு, உரியராய்-உரிமை யுடையவராய், ஒட்டு இன்று-ஒப்பற்று, உயர-உயர்வத ற்கு, உலகத்தோர்-உலகத்தார், கட்டளை ஆம்-கட்டளை யாகிய, வெறுக்கை-செல்வம், இன்றி-இல்லாமல், அமை யார்-நிரம்பாராம் (அஃது) இலார்-செல்வமில்லாதா ரது, உடம்பு-சரீரம், மையாவின் நிற்க-காட்டுப் பசு வைப்போல யாதொரு பயனுமற்று நிற்க, வெறுக்கை ஆம்-(அதன்மீது) யாவர்க்கும் வெறுப்பு உண்டாகும்.

பொழிப்புரை :—மெய்யாகத் துறவிகளும் துதித் தற்கு உரிமையுடையவராய் ஒப்பற்று உயர்வதற்கு

உலகத்தார் கட்டளையாகிய செல்வம் இல்லாமல் நிரம்பார். செல்வ மில்லாதாரது சரீரம் காட்டுப் பசுவைப்போல யாதொரு பயனுமற்று நிற்க (அதன் மீது) யாவர்க்கும் வெறுப்பு உண்டாகும்.

கருத்துரை :—துறவிகளும் பிறரால் மதிக்கப் படுதற்குச் செல்வ முடையரா யிருத்தல் இன்றியமை யாதது. செல்வ மில்லாரை எல்லாரும் வெறுப்பர்.

விசேடவுரை :—கட்டளை-உரைகல். காட்டுப்பசு ஒருவருக்கும் பால் கொடாததாலும் தன்னை அண்டி னோரை நக்கி அவர் இரத்தத்தைக் கவர்தலாலும் அதனை எல்லாரும் வெறுப்பர். அவ்வாறே, பொருளில் லாதார் ஒருவருக்கும் ஒன்றும் கொடாததாலும் தம்மை அண்டினோர் பொருளைக் கொள்வதாலும் அவரை எல்லாரும் வெறுப்பர். துறவிகளும் செல்வத்தால் மேன்மை யுறுவரென்பது "நூலுறு கல்வியை நுனித்து நாடியே, வாலறி வெய்திய வரத்தினோர்களும், மேலுறு திருவொடு மேவுறுரெனின், ஞாலமங் கவர் தமை நவையுள் வைக்குமால்" என்னும் கந்தபுராணத் தாலும் "முனிவரு மன்னரும் முன்னுவ பொன்னால் முடியும்" என்னும் திருக்கோவையாராலும் விளங்கும். பொருளில்லாதாரை எல்லாரும் வெறுப்ப ரென்பது "கல்லானே யானாலுங் கைப்பொருளொன் றுண்டா யின், எல்லாரும் சென்றங் கெதிர்கொள்வர்—இல்லானை, இல்லாளும் வேண்டாள்மற் றீன்றெடுத்த தாய்வேண் டாள், செல்லா தவன்வாயின் சொல்" என்னும் நல்

வழியால் இனிது விளங்கும். அவரை எல்லாரும் வெறுப்பதற்குக் காரணம் அவர் பிறர் "உயிர்க்கும் காடிக்கும் கூற்று" யிருத்தலாம். இச்செய்யுளின் மூன்று ~~இரண்டாம்~~ அடி ஐந்து சீரால் வந்தது. 'தூயரும்' என்பது உம்மை கெட்டுநின்றது. (௬)

பொருட்பால் முற்றிற்று.

---

௨௫. அறங்கரை நாவா னாய்மயிலார் சீரி
லறங்கரையா நாப்ப ணடைவாம்-புறங்கரையாத்
திண்மை நிலையி னுயர்புலத்திற் சேர்வாமீண்
டெண்ணிலைக் குய்வா யிது.

அநுவயம் :—அறத்தைக் கரையும் நாவான், ஆய்ந்த மயிலார் சீர் ஆம்; இல்லறம் கரையாக நாப்பணின் அடைவு ஆம்; புறத்தில் கரையாத் திண்மை நிலையின் உயர்ந்த புலத்தின் சேர்வு ஆம்; இது ஈண்டு எண் நிலைக்கு உய்க்கும் வாய்.

பதவுரை :—அறம் கரை நாவான்-அறங்களையே (எப்பொழுதும்) உரைக்கின்ற நாவினையுடையனாயிருத்தலால், ஆய் மயிலார் சீர் ஆம்-ஆய்ந்தெடுத்த மயிலைப் போன்ற பெண்களோடு கூடிவாழும் சிறப்பு உண்டாகும்; இல்லறம் கரையாக-(அவ்வில்வாழ்க்கையில் நின்று செய்யும்) இல்லறம் முடிவாக, நாப்பண் அடைவாம்-(இவ்வுலகத்திற்கும் மோக்ஷவுலகத்திற்கும்) மத்தியிலுள்ள சுவர்க்கவுலகச் சேர்க்கையுண்டாகும்; புறம் கரையா-புறத்தில் தளராத, திண்மை நிலையின்-உறுதியான தவநிலையால், உயர்புலத்தின் சேர்வு ஆம்-மோக்ஷவுலகச் சேர்க்கை உண்டாகும்; இது-இவ்இல் வாழ்க்கை, ஈண்டு-இவ்வுலகத்தில், எண் நிலைக்கு-எண்ணக் கூடிய நிலைகளுக்கெல்லாம், உய் வாய் ஆம்-செலுத்தும் வழியாம்.

பொழிப்புரை:—அறங்களையே எப்பொழுதும் உரைக்கின்ற நாவினையுடையளாயிருத்தலால் ஆய்ந்தெடுத்த மயிலைப்போன்ற பெண்களோடு கூடிவாழும் சிறப்பு உண்டாகும்; (அவ்வில்வாழ்க்கையில் நின்று செய்யும்) இல்லறம் முடிவாக (இவ்வுலகத்திற்கும் மோக்ஷவுலகத்திற்கும்) மத்தியிலுள்ள சுவர்க்கவுலகச் சேர்க்கை யுண்டாகும்; புறத்தில் தளராத உறுதியான தவநிலையால் மோக்ஷவுலகச் சேர்க்கை யுண்டாகும்; இவ் இல்வாழ்க்கை இவ்வுலகில் எண்ணக்கூடிய நிலைகளுக்கெல்லாம் செலுத்தும் வழியாம்.

கருத்துரை:—அறம் உரைத்தலால் இல்லின்பம் சித்திக்கும்; இல்லறம் இயற்றலால் சுவர்க்கம் சித்திக்கும்; ஒழுக்கம் கெடாது தவம் இயற்றலால் மோக்ஷம் சித்திக்கும்; சுருங்கச் சொல்லின், எல்லா நிலைகளுக்கும் இவ்வாழ்க்கையே வழியாம்.

விசேடவுரை:—'அறங்கதை நா' வென்பது அறத்தைச் சொல்கின்ற நாவும் அறத்தைச் செய்விக்கின்ற நாவுமாம். மயிலினது சாயலைப்போன்ற சாயலை யுடையாரை 'மயிலார்' என்றார். அறமானது இல்வாழ்க்கையின்பத்தைத் தருமென்பது "தனக்குத் துணையாகித் தன்னை விளக்கி, இனத்துள் இறைமையும் செய்து-மனக்கினிய போகம் தருதலால் பொன்னே அறத்துணையோ, டேகமா நன்பொன்றும் இல்" எனனும் அறநெறிச் சாரத்தால் விளங்கும். இல்லறம் சுவர்க்கத்தை அளிக்குமென்பது "வையத்துள் வாழ்வாங்கு வாழ்

பவன் வானுறையும், தெய்வத்துள் வைக்கப் படும்" என்னும் பொய்யாமொழியாலும், "தாரம் நல்விதம் தாங்கித் தலைநின்மின், ஊருமா நாடும் உவத்தல் ஒரு தலை, வீர வென்றி விறன்மிகு விண்ணவர், சீரினைத் திச் சிறப்பெதிர் கொள்பவே" என்னும் வளையாபதிச் செய்யுளாலும், இல்லறம் மோக்ஷத்தையும் மற்றைய நிலைகளையும் அளிக்குமென்பது "இத்தகைய நால்வர்களில் மூவருக்கும் இறந்தார்க்கும், அத்தமுதல் அற்றார்க்கும் ஆதாரம் ஆதலினால், உத்தமமாம் இல்லறமே வாழ்வினுக்கும் உயர்கதிக்கும், வித்துமாம் துறவறத் தின் வேறுமாம் எனும்வேதம்" என்னும் திருக்குற்றாலப்புராணச் செய்யுளாலும் விளங்கும். 'கரையாக' என்பது ஈறு கெட்டுநின்றது. (க)

உக. துணையென்ப காம விருந்துய்ப்பார் தோமில்
விணைவிழைச்சின் மிக்காகா ராகல்-புணைதழீஇக்
கூட்டுங் கடுமிளையான் கட்டியிற் கொண்டற்றால்
வேட்டபோழ் தாகு மணி.

அநுவயம் :— காம விருந்து துய்ப்பாரைத் துணை என்ப (ஆன்றோர்); (அவர்) தோம் இல் இணைவிழைச்சில் மிக்காகாராகல் புணைபோலத் தழீஇக் கூட்டும்; (ஆதலால்) வேட்ட போழ்து ஆகும அணி கடுமிளையான் கட்டியில் கொண்டற்று.

பதவுரை :— காமவிருந்து-இன்பவிருந்தினை, துய்ப்பார் துணை என்ப(ஆன்றோர்)-அநுபவிப்பாரை(மோக்ஷத்தை அடைதற்கு ஒருவருக்கொருவர்) துணை என்

பர் ஆன்ஞேர் ; தோம் இல்-குற்றமற்ற, இணைவிழை ச்சில்-கூட்டத்தின்கண்ணே, மிக்கா கா ராகல்-(அவர்) அளவுகடவாதவ ராகல், புணை தழீஇ கூட்டும்-புணை போலத் தழுவி (மோக்ஷத்தைச்) சேர்க்கும் ; (ஆத லால்), வேட்ட போழ்து-(ஒருவன் ஒருத்தியை) மண ந்தபொழுது, ஆகும் அணி-உண்டாகும் கூட்டம, கடு மிசையான்-கசப்பு மருந்தினை யுண்ணுதவன், கட்டியில் உண்ட அற்று-(அதனைக்) கருப்புக் கட்டியில பொதி ந்து உண்ட அத்தன்மைத்து

பொழிப்புரை :—இன்ப விருந்தினை அநுபவிப் பாரை (மோக்ஷத்தை அடைவதற்கு ஒருவருக்கொரு வா) துணை யென்பர் ஆன்ஞேர் ; குற்றமற்ற கூட்டத் தின்கண்ணே அவர் அளவுகடவாதவ ராகல் புணைபோ லத் தழுவி (மோக்ஷத்தைச்) சேர்க்கும் ; (ஆதலால்), ஒருவன ஒருத்தியை மணந்த பொழுது உண்டாகும கூட்டம், கசப்பு மருந்தினை உண்ணுதவன் (அதனைக்) கருப்புக்கட்டியில் பொதிந்து உண்ட அத்தன்மைத்து.

கருத்துரை :—மோக்ஷத்தை யடைவதற்கு இல் வாழ்க்கை சுகமான மார்க்கம்.

விசேடவுரை:—நிலையற்ற இணைவிழைச்சிஞலாம் இன்பத்தைக் கண்டவர் நிலையான பேரின்பத்தை அடையு முயலுவாராதலால், அதனைக் கருப்புக்கட்டி க்கு உவமித்தார். இது, இறையஞரகப் பொருளுரை யில் நக்கீரஞர் " கடுத்தின்ஞுதானைக் கட்டி பூசித் தீற்றி யவாறு போலு " மென்று கூறியிருப்பதை நினைப்

பூட்டுகின்றது. 'விருந்து துய்ப்பார்' என்பது 'விருந் துய்ப்பார்' என மருவியது. 'விருந்து உய்ப்பார்' எனக்கொண்டு 'விருந்தில் தம்மை உய்ப்பார்' என உரைப்பினும் பொருந்தும். 'ஆல்' என்பது அசை. (௨)

௨௨. ஒப்புயர்வில் வேட்டோ னொருநிலைப்பட் டாழ்ந்தசெய
லைப்பின்னை ஞால மொருங்கறிக—துப்பாராய்த்
தூமலரின் மென்மையுறு தோற்றத்தே வைத்
தேமக் கிழத்தி யறிந்து. [துய்க்க

அநுவயம் :—நப்பின்னையை ஒப்பும் உயர்வும் இல் வேட்டோன் ஒரு நிலைப்பட்டு ஆழ்ந்த செயலை ஞாலம் ஒருங்கு அறிக; ஏமக் கிழத்தியை அறிந்து துப்பாராய்த் தூமலரின் மென்மையுறும் தோற்றத்தே வைத்து உய்க்க.

பதவுரை :—நப்பின்னை-நப்பின்னைப் பிராட்டியாரை, ஒப்பு உயர்வு இல் வேட்டோன்-ஒப்பும் உயர்வும் இல்லாது விரும்பியவனாகிய கண்ணன், ஒரு நிலைப்பட்டு ஆழ்ந்த செயல்-(என்ஞான்றும்) ஒரே தன்மையாக (இன்பத்தில்) ஆழ்ந்த செயலை, ஞாலம் ஒருங்கு அறிக-உலகத்தா ரெல்லாம் அறிக; (அவன் போல) ஏமம் கிழத்தி அறிந்து-தமக்குச் சேமத்தை உண்டு பண்ணும் இல்லாளைத் தெரிந்துகொண்டு, துப்பாராய்-துணைவராய் நின்று, தூ மலரின்-தூய பூவினது, மென்மையுறு தோற்றத்தே-மென்மை பொருந்திய சிறப்பில், வைத்து உய்க்க-வைத்து (இல்லறத்தை) நடாத்துக.

பொழிப்புரை :—நப்பின்னைப்பிராட்டியாரை ஒப்பும் உயர்வும் இல்லாமல் விரும்பியவனாகிய கண்ணன் (என்றென்றும்) ஒரே தன்மையாக (இன்பத்தில்) ஆழ்ந்த செயலை ஞாலத்தாரெல்லாம் அறிக; (அவன் போலத்) தமக்குச் சேமத்தை உண்டு பண்ணும் இல்லாளைத் தெரிந்துகொண்டு துணைவராய் நின்று தூய பூவினது மென்மை பொருந்திய சிறப்பில் வைத்து (இல்லறத்தை) நடாத்துக

கருத்துரை :—தனக்குத் தக்க இல்லாளைத் தெரிந்துகொண்டு துணையாக நின்று மிக மென்மையாக வைத்து இல்லறத்தை நடத்துக.

விசேடவுரை:—நப்பின்னையாரைக் கண்ணன் நேசித்தமை சிலப்பதிகாரம்-ஆய்ச்சியர் குரவை-எடுத்துக் காட்டில்வரும "வையம் அளந்தான் மார்பின் திருநோக்காப், பெய்வளைக் கையாணம் பின்னைதானென்றே" என்னும் அடிகளாலும், " உப்பக்கம் நோக்கி உபகேசி தோள்மணந்தான் " என்னும் திருவள்ளுவமாலைப்பாவின் அடியாலும் விளங்கும். 'ஒப்பும் உயர்வும் இல்லாமல் விரும்பிய கண்ணன்' என்பதைத் 'தத்தம் காதலியரை நேசித்தவருள் ஒப்பும் உயர்வும் இல்லாதவன் கண்ணன்' என்று கொள்க. "யாரினும் காதல மென்றேனா ஊடினள், யாரினும் யாரினும் என்று" என்னும் திருக்குறளிலுள்ள " யாரினும் காதலம்" என்பதற்கு மணக்குடவரும் பரிமேலழகரும் " காமம் நுகர்தற்குரிய இருவராயினார் யாவரினும் யாம் மிக்க காதலை

புடையேம்" என்று உரைத்தமை காண்க. தானும் தன் இல்லாளும் துணையாகநின்று இல்லறத்தை நடத்த வேண்டு மென்பது "மருவிய காதல் மனையாளும் தானும், இருவரும் பூண்டெர்ப்பி னல்லால்—ஒருவரால், இல்வாழ்க்கை யென்னும் இயல்புடைய வான்சகடம், செல்லாது தெற்றிற்று நின்று" என்னும் அறநெறிச் சாரத்தாலும, "உடம்போ டுயிரிடை யென்னமற் றன்ன, மடைந்தையோ டெம்மிடை நட்பு" என்னும் திருக்குறளாலும் விளங்கும். இல்லாளைத் "தாமலரின் மென்மையுறு தோற்றத்தே" வைத்துநடத்த வேண்டு மென்பது, "மெல்லிய னல்லாருள் மென்மை" என்னும் நாலடியாலும், "அனிச்சமும் அன்னத்தின் தூவியும் மாதர், அடிக்கு நெருஞ்சிப் பழம்" என்னும் திருக்குறளாலும் விளங்கும். (௬)

உ௬. பாலை வளர்த்துக் கணங்குழை மாலையுறல்
சால்பென்ப கண்கூடா காணாய்—தழைகாதல்
வாலறிவ னாக்க வகையறிக காலத்தாற்
றோலொடு நாலைந் தணந்து.

அநுவயம் :—பாலை வளர்த்து மாலையில் கணங் குழையை உறல் சால்பு என்ப (ஆன்றோர்); (காதலால்), காலத்தால் தோலொடு நாலைந்து அணந்து கண் கூடாகக் காணாய்; தழையும் காதலால் வால் அறிவன் ஆக்க வகையை அறிக.

பதவுரை :—பாலை வளர்த்து-(பகலில்) பிரிவினை வளர்த்து, மாலை-இரவின் முதல்யாமத்தின்கண்ணே,

கணங்குழை - பலவாய்த் திரண்ட குண்டலங்களை உடைய இல்லாளை, உறல் - கூடுதல், சால்பு என்ப- மேம்பாடு என்று சொல்லுவர் (பெரியோர்); (ஆத லால்), காலத்தால் - தக்க பருவத்தில், தோலோடு- அழகோடு பொருந்திய, நாலைந்து - நாலைந்து ஆண்டு இளையாளை, அணைந்து-கூடி, கண் கூடாக-பிரத்தியட்ச மாக, காணுய்-(அம்மேம்பாட்டைக்) காண்பாயாக; தழை காதல்-மேன்மேலும் வளரும் அன்பால், வால் அறிவன்-தூய அறிவே தனது வடிவமாகக் கொண்ட பகவான் அருளை, ஆக்க-செய்வதற்கு, வகை யறிக- வழியை அறிவாயாக.

பொழிப்புரை :—(பகலில்) பிரிவினை வளர்த்து, இரவின் முதல்யாமத்தின் கண்ணே பலவாய்த்திரண்ட குண்டலங்களை உடைய இல்லாளைக் கூடுதல் மேம்பாடு என்று சொல்லுவர் (பெரியோர்); (ஆதலால்), தக்க பருவத்தில் அழகோடு பொருந்திய நாலைந்து ஆண்டு இளையாளைக் கூடிப் பிரத்தியட்சமாக (அம்மேம்பாட்டை)க் காண்பாயாக; மேன்மேலும் வளரும் அன்பால் தூய அறிவே வடிவமாகக் கொண்ட பகவான் அருளைச் செய்வதற்கு வழியை அறிவாயாக.

கருத்துரை :—தனக்கு நாலைந்து ஆண்டு இளைய ளாயும் அழகோடு கூடியவளாயு முள்ள ஒருத்தியை மணந்து பொருள் செய்து, இன்பம் அநுபவித்து, அன்பை வளர்த்துப் பகவான் அருளை ஆக்குக.

விசேடவுரை :—பிரிவு இடைத்தின் கண்ணே

அதிக விருப்பத்தைத் தருமாதலால் "பாலே வளர்த்து" என்றார். "வருகமற் கொண்கன் ஒருநாள்; பருகு வன், பைதல்நோய் எல்லாம் கெட" என்றது திருக்குறள். மாலையில் காதலரைக் கூடுதல் அதிக இன்பம் பயக்குமென்பது "காலை யரும்பிப் பகலெல் லாம போதாகி, மாலை மலருமிந் நோய்" என்னும் திருக்குறளால் விளங்கும். அழகோடு பொருந்திய நாலைந்து ஆண்டு இளையாளை மணக்கவேண்டுமென் பது இறையனாரகப் பொருளுக்கு நக்கீரனார் உரைத் துள்ள உரையிற் கண்ட "இவனும் பதினாறாட் டைப் பிராயத்தானாய் இவளும் பன்னீராட்டைப்பிரா யத்தாளாய் ஒத்தபண்பும் ஒத்தநலனும் ஒத்த அன் பும் ஒத்தசெல்வமும் ஒத்தகல்வியு முடையராய்ப் பிறி தொன்றிற்கு ஊனமின்றிப் போகந்துய்ப்பார்" என் னும் வாக்கியத்தால் விளங்கும். அன்பால் வாலறிவன் அருள் ஆகுமென்பது "அன்புற் றமர்ந்த வழக்கென்ப வையகத் தின்புற்றார் எய்தும் சிறப்பு" என்னும் திருக்குறளால் விளங்கும். 'கணங்குழை' என்பது அன்மொழித் தொகை. "காலத்தால்" என்பது வேற்றுமை மயக்கம். 'நாலைந்து' என்பதும் 'வால றிவன்' என்பதும் ஆகுபெயர்கள். "பாலே வளர்த்தி" என்றும் பாடம். (அ)

உஅ. அழுக்குடம்புச் சிழ்நோரன் யாத்தசீர் மெல்லியலை யாண
முழுக்காட்டி மன்றின்முன் கைத்தாக்-குழீஇக்கட
லென்னே செறிகாமம் பூட்டு மியல்மாரன்
மன்னரசாண் மீண்பூப் புலகு.

அநுவயம் :—சீழ் நீரான் யாத்த சீர் அழுக்கு உடம்பையுடைய மெல்லியலை யாணத்தால் முழுக்காட்டி மன்றின்முன் கையகத்தாகக் குழீஇக் கூடல் என்னே? உலகு செறிந்த காமத்தைப் பூட்டும் இயல் மாரனுகிய மன் அரசால் மாண் பூப்பு.

பதவுரை :—சீழ் நீர் யாத்த சீர்-இரத்த நீரால் பிணைப்புண்ட தன்மையுள்ள, அழுக்கு உடம்பு-அழுக்கு உடம்பையுடைய, மெல்லியலை-மெல்லிய தன்மையாளை, யாணம் முழுக்காட்டி-வாசனைக்கூட்டால் முழுக்காட்டி, மன்றின்முன்-(கலியாண காலத்திற் கூடியுள்ள) சபையார்முன்னர், கையகத்தாக குழீஇ-கையினிடமாகக் கொண்டு, கூடல் என்னே-(மணந்து) கூடுதல் யாது காரணம்? உலகு-உலகமானது, செறி காமம் பூட்டும்-செறிந்த காமத்தைச் சேர்க்கும், இயல் மாரன்-இயல்புள்ள மன்மதனுடைய, மன் அரசால்-நிலை பெற்ற அரசாட்சியால், மாண் பூப்பு-மாட்சிமைப்பட்ட பொலிவாம்.

பொழிப்புரை :—இரத்தநீரால் பிணைப்புண்ட தன்மையுள்ள அழுக்குடம்பையுடைய மெல்லிய தன்மையாளை வாசனைக் கூட்டால் முழுக்காட்டி, (கலியாண காலத்திற் கூடியுள்ள) சபையார்முன்னர்க் கையினிடமாகக் கொண்டு (மணந்து), கூடுதல் யாது காரணம்? உலக மானது செறிந்த காமத்தைச் சேர்க்கும் இயல்புள்ள மன்மதனுடைய நிலைபெற்ற அரசாட்சியால் மாட்சிமைப்பட்ட பொலிவாம்.

கருத்துரை :—உலகத்திலுள்ளார் பலரும் இன் பத்தே விருப்பமுடையவர். அதனால், ஒவ்வொருவரும் ஒவ்வொரு பெண்ணை மணந்து கொள்கின்றனர்.

விசேடவுரை :—இச்செய்யுளின் முதல்பாகம் இல்வாழ்க்கையை இகழும் துறவிகளுடைய வினு; இர ண்டாம் பாகம் விடை. "குடரும் கொழுவும் குருதியும் என்புந், தொடரும் நரம்பொடு தோலும்—இடை யிடையே, வைத்த தடியும் வழும்புமாம் மற்றிவற்றுள், எத்திறத்தாள் ஈர்ங்கோதை யாள்" என்றனர் நாலடி யார். 'உலகம் மன்மதனது அரசாட்சியின் பொலிவாம்' என்பதன் பொருள், 'உலகத்தா ரெல்லாம் மன்மதன் அரசாட்சிக்குக் கீழ்ப்பட்டவ'ரென்பது. பிர்போதசந் திரோதய ஆசிரியரும் "ஒத்தேறும் உருவமில்லாப் பிரமமொன்று மேயொழிய உருவமுள்ளார், எத்தேவ ராயினுமோர் பூங்கணையால் தம்போத மெல்லாம் நீங்கி, மத்தேறி யுடைதயிர்போல் மனம்சுழன்று செயல்மறந்து மடவாராசைப், பித்தேறி யிதமுரை த்த பேதையர்க்கும் பேதையராய்ப் பின்செல்வா ரால்" என்றனர். இச்செய்யுளின் முதலடி ஐந்துசீர் களைக்கொண்டுள்ளது. "மெல்லியல்" என்பது அன் மொழித் தொகை. 'கையகத்தாக' என்பது 'கைத்தா' என விகாரப்பட்டு நின்றது. ஏகாரம் அசை. 'குழீ இக்கூடல்' என்பதிலுள்ள அளபெடையை அலகிடாது "புளிமாங்காய்"ச் சீராகக்கொள்க. (௫)

உ௧. இன்ப வியலோரார் யாணர் விழைகாமம்
பொன்னி னணிமலரிற் செவ்விதாம்—தன்மேனி
முத்த முறுவல் முயக்கொக்கி னன்னத்தின்
பெற்றியரி னென்பெறும் பேறு.

அன்வயம் :—(சிலர்) இன்ப இயலை ஓரார். யாணர் விழையும் காமம் பொன்னினும் அணி மலரினும் செவ்விதாம். தன்மேனியும் முத்தமும் முறுவலும் முயக்கும் ஒக்கின், அன்னத்தின் பெற்றியரின் பெறும் பேறு என்?

பதவுரை :—(சிலர்) இன்ப இயல் ஓரார்-(சிலர்) இன்பத்தின் தன்மையை அறியார். யாணர் விழை காமம் - புதிது புதிதாக விரும்பும் காமம், பொன்னின்-பொன்னினும், அணி மலரின்-அழகிய மலரினும், செவ்விதாம் - இன்பத்தைத் தருவதாம். தன்மேனி-தனது உடம்பும், முத்தம்-பல்லும், முறுவல்-நகையும், முயக்கும் - கூட்டமும், ஒக்கின் - ஒப்ப அமைந்திருப்பின், அன்னத்தின் பெற்றியரின்-அன்னத்தினது தன்மையையுடைய பெண்களைப் போல, பெறும் பேறு-(ஒருவன்) பெறும் செல்வம், என்-(வேறு) யாது?

பொழிப்புரை :—(சிலர்) இன்பத்தின் தன்மையை அறியார். புதிதுபுதிதாக விரும்பும் காமம் பொன்னினும் அழகிய மலரினும் இன்பத்தைத் தருவதாம். தனது உடம்பும் பல்லும் நகையும் கூட்டமும் ஒப்ப அமைந்திருப்பின், அன்னத்தினது தன்மையையு

டைய பெண்களைப்போல (ஒருவன்) பெறும் செல்வம் (வேறு) யாது?

கருத்துரை :—உருநலனும் குணநலனும் உடைய பெண்ணொடு கூடி வாழ்தலே, ஒருவன் பெறத்தக்க பேறுக ளெல்லாவற்றிலும் சிறந்த பேறும்.

விசேடவுரை :—யாணர்-புதிது. 'சேயிழைமாட் டுச் செறியும் தோறும்' இன்பம் புதிது புதிதாகத் தோன்றுவதால் அதனை 'யாணர்' என அடைமொழி கொடுத்துக் கூறினர். காமம்-தலைவனும் தலைவியும் கூடும் கூட்டம். மேனியும் முத்தமும் முறுவலும் அமைந்திருத்தலினது சிறப்பைப்பற்றி "முறிமேனி முத்தம் முறுவல் வெறிநாற்றம், வேலுண்கண் வேய்த் தோ ளவட்கு" எனவும், முயக்கின் சிறப்பைப்பற்றித் "தம்மி லிருந்து தமதுபாத் துண்டற்றால், அம்மா அரி வை முயக்கு" எனவும், "மலரினு மெல்லிது காமம சிலரதன், செவ்வி தலைப்படு வார்" எனவும் பொய்யா மொழியார் கூறியுள்ளார். முத்துப்போன்றிருத்தலால், பல் முத்தெனப் பட்டது. இதழ்கள் முறுவலிக்கும் காரணத்தால், நகை முறுவலெனப் பட்டது. 'ஒக்கின்' என்பது அஃதஃது அமைந்திருக்க வேண்டிய இயல் பின் அமைந்திருப்பின் என்று பொருள்படும். அன் னத்தின் தன்மையாவது நீரும பாலும் கலந்துவைக் கப்பட்ட காலையில், இரண்டையும் பிரித்து நீரை விலக்கிப் பாலை யுண்ணுதல். அது போல, இன்பம் துய்க்கும் காலையில் நேரும் புலவியை நீக்கி இன்பத்

தைத் துய்த்தலாம். அன்றியும், அன்னத்தின் நடை யைப் போன்ற அழகிய நடையை யுடையாரென்று உரைப்பினும் அமையும். ஒருவன் பெறும் பேறுகளில் தகுதியமைந்த பெண்ணே சிறந்த பேறு என்பது "பெண்ணிற் பெருந்தக்க யாவுள கற்பென்னும், திண்மையுண் டாகப் பெறின்" என்னும் திருக்குறளாலும் விளங்கும். 'என்' என்னும் வினு 'வேறில்லை' என்னும் பொருள் தந்துநின்றது. சிலர் என்பது எச்சமாக வருவிக்கப்பட்டது. 'பொன்னினும்' என்பதும் 'மலரினும்'' என்பதும், 'முபக்கு' என்பதும் உம்மை தொக்கு நின்றன. (சு)

உ௬. தூவி நெருஞ்சிக்காய் நீர்முள்ளி தும்மையலர்
காவியன சேற்கண் குறுந்தொடியா—ராவிக்
கினிய ரிணைசேரா ரீர்ங்கண்மா ஞாலத்
தனிமைக் கவரோர் கரி.

அநுவயம் :— :—தூவியை நெருஞ்சிக் காயாகவும் தும்மை யலரை நீர் முள்ளியாகவும கொள்ளும் அடியையும், காவியையும் சேலையும் அன்ன கண்ணையும் உடைய குறுந்தொடியார், ஆவிக்கு இனியர். இணை சேராராகிய அவர் ஈர்ங்கண் மா ஞாலத்துத் தனிமைக்கு ஓர் கரி.

பதவுரை:—தூவி-அன்னத்தின் தூவியை, நெருஞ்சிக்காய்-நெருஞ்சிக்காயாகவும், தும்மையலர் நீர்முள்ளி-தும்மைமலரை நீர்முள்ளியாகவும் (கொள்ளும் அடிகளையும்), காவி-நீலோற்பல மலரையும், சேல்-சேல்

மீனையும், அன்ன-ஒத்த, கண்-கண்களையும். உடைய, குறுந்தொடியார் - சிறியவளை களை அணிந்த மகளிர், ஆவிக்கு இனியார்-(ஆடவரின்) உயிர்க்கு இனிய துணை யாவர். இணை சேரார் அவர்-அத்தகைய இனிய துணை யைக் கொள்ளாதவராகிய அவர், ஈர்ங் கண் மா ஞாலத் து-குளிர்ச்சி பொருந்திய இடமகன்ற பெரிய புவியின் கண்ணே, தனிமைக்கு-தனிமையுற்று வருந்துவதற்கு, ஓர் கரி-ஒப்பற்ற சான்றுவர்.

பொழிப்புரை :—அன்னத்தின் தூவியை நெருஞ் சிக்காயாகவும் தும்பைமலரை நீர்முள்ளியாகவும் கொள் ளும் அடிகளையும், நீலோற்பல மலரையும் சேல்மீனையும் ஒத்த கண்களையும் உடைய குறுகியவளைகளை அணிந்த மகளிர் (ஆடவரின்) உயிர்க்கு இனிய துணையாவர் அத்தகைய இனிய துணையைக் கொள்ளாதவராகிய அவர், குளிர்ச்சி பொருந்திய இடமகன்ற பெரிய புவி யின் கண்ணே தனிமையுற்று வருந்துவதற்கு ஒப்பற்ற சான்றுவர்.

கருத்துரை :—ஆடவரின் உயிர்க்கு இனிய துணை யாகிய இல்லாளைக் கொள்ளாதார் உலகத்தின்கண்ணே தனிமையுற்றுத் துன்ப முறுவர்.

விசேடவுரை ;—" அனிச்சமும் அன்னத்தின் தூவியும் மாதர், அடிக்கு நெருஞ்சிப் பழம்" எனவும், " காணிற் குவளை கவிழ்ந்து நிலனோக்கும், மாணிழை கண்ணொவ்வே மென்று" எனவும் மாதர் அடிகளையும் கண்களையும் சிறப்பித்துக் கூறினர் திருக்குறளாசிரியர்.

தம் உயிர்க்கு இனிய துணையாகிய பெண்ணை வெறுத்த ஆடவர் உலகத்திலுள்ள மற்றைய யாவரையும் வெறுப்பரென்பதுபற்றி அவரைத் தனிமைக்குக் கரி என்றார். "இன்னா தினனில்லூர் வாழ்தல்; அதனினும், இன்னா தினியார்ப் பிரிவு".—திருக்குறள். 'கொள்ளும் அடி' என்பது எச்சமாக வருவிக்கப்பட்டது 'ஞாலத்து' என்பது 'அத்து'ச் சாரியை கெட்டுநின்றது. (எ)

உஎ. காமம்வீ ழின்பக் கடலாமே காதலரி
னேம விருக்கையே தூந்திரையா—மேமத்தீண்
டாம்பரலே தோன்று மளியூட லாம்பரலிற்
றெற்றித் தெறிப்பா மொளியொளிபாய் கண்ணே
துற்றுகப்பாய்ப் பெற்ற மகவு. [சீர்த்

அநுவயம் :—காமமே வீழும் இன்பக் கடலாம்; காதலரின் ஏம இருக்கையே தூவும் திரையாம்; தோன்றும் அளியே ஏமத்து ஈண்டும் பரலாம்; ஊடலே ஆம் பரலில் தெற்றித் தெறிப்பு ஒளியாம; சீர்த்து உற்று உகப்பாய்ப் பெற்ற மகவே ஒளிபாயும் கண்ணும்.

பதவுரை :—காமமே - காமவேட்கையே, வீழ் இன்பக் கடலாம்-மாந்தர் விரும்பும் இன்பக்கடலாம்; காதலரின் ஏம இருக்கையே - காதலன் காதலியாகிய இருவரது சேமச் சேர்க்கையே, தூம் திரையாம்-(அக்கடல்) தூவும் அலையாம்; தோன்று அளியே-(அவ்விருவரிடத்தும்) உண்டாகும் அன்பே, ஏமத்து ஈண்டும் பரலாம்-அச்சேம இருப்பாகிய அலையினின்று

வெளிவரும் முத்தாம் ; ஊடலே-(அவ்விருவருள்ளும்) உண்டாகும் புலவியே, ஆம் பரவில் தெற்றித் தெறிப்பு ஒளியாம்-(அவ்வாறு) ஆகும் முத்தினின்று எழுந்து பாயும் ஒளியாம்; சேர்த்து உற்று உகப்பாய் பெற்ற மகவே-(அவ்விருவரும்) சிறந்து பொருந்தி உவந்து பெற்ற (இருபால்) மக்களே, ஒளிபாயும் கண்ணும்-அவ்வொளி பாயும் கண்களாம்.

பொழிப்புரை :—காம வேட்கையே மாந்தர் விரும்பும் இன்பக் கடலாம்; காதலன் காதலியாகிய இருவரது சேமச் சேர்க்கையே (அக்கடல்) தூவும் அலையாம் ; (அவ்விருவரிடத்தும்) உண்டாகும் அன்பே அச்சேம இருப்பாகிய அலையினின்று வெளிவரும் முத்தாம்; அவ்விருவருள்ளும் உண்டாகும் புலவியே அவ்வாறு ஆகும் முத்தினின்று எழுந்து பாயும் ஒளியாம் ; அவ்விருவரும் சிறந்து பொருந்தி உவந்து பெற்ற (இருபால்) மக்களே அவ்வொளி பாயும் கண்களாம்.

கருத்துரை :—இன்பத்திற்கு இருவரது வேட்கையும், இருவரது சேர்க்கையும், இருவரது அன்பும், இருவரது புலவியும், இருவரது தெளிவும், இருவரது கூட்டமும், இருவகை மக்களும சிறப்பு.

விசேடவுரை:—"இன்பம் கடல்மற்றுக் காமம்".—திருக்குறள். "காமக கடல்மன்னு முண்டே".—திருக்குறள். "பெண்ணலத்தினைப் பெறுதவர் மகவினைப் பெறுதார், பெண்ணலத்தினைப் பெற்றவரேமகப் பெற்றார், பெண்ணலத்திறன் மகவுபெற் றிருமையும்

பெறுவார், பெண்ணலத்தினு னன்றியோர் பெரும் பொரு ளுண்டோ".—பிரமோத்தர காண்டம். "புலத்தலிற் புத்தேணு டுண்டோ நிலத்தொடு, நீரி யைந் தன்ன ரகத்து".—திருக்குறள். "நலத்தகை நல்லவர்க் கேளர் புலத்தகை, பூவின்ன கண்ணு ரக த்து".—திருக்குறள். "ஊட லுணர்தல் புணர்த லிவைகாமம், கூடியார் பெற்ற பயன்".—திருக்குறள். 'கடலாமே' என்பதன் ஏகாரம் 'காமம்' என்பதனோ டும், 'பரலே' என்பதன் ஏகாரம் 'அளி' என்பதனோ டும், 'ஈண்டாம்' என்பதன் ஆக்கச் சொல் 'பரல்' என் பதனோடும், 'தெறிப்பாம்' என்பதன் ஆக்கச்சொல் 'ஒளி' என்பதனோடும், கூட்டியுரைக்கப் பட்டன. 'ஊடலே' என்பது ஏகாரம் கெட்டு நின்றது.

உஅ. கறங்குபறை காணு வுறுவூனைக் காதற்
பிறங்கறை நாவாரு மஃதே—திறமிரங்கி
யூடி யுணர்வாரே தாமிசைவர் பல்கால
மீடிலதே ரின்ப விருந்து.

அநுவயம் :—கறங்கு பறை உற்ற ஊனைக் காணு; காதல் பிறங்க அறையும் நாவாரும் அஃதே. திறத் தால் இரங்கி ஊடி உணர்வாரே ஈடிலது ஏர் இன்ப விருந்தைப் பல்காலம் மிசைவர்.

பதவுரை :—கறங்கு பறை-(பலியிடுங்கால்) ஒலிக் கின்ற பறைகள், உறு ஊனை-பலியிட்ட ஊனின் சிறப் பை, காணு-அறியமாட்டா; (அது போல), காதல் பிற ங்க அறை-காமத்தை வெளிப்படச் சொல்லுகின்ற,

நாவாரும்-நாவினை உடையவரும், அஃதே-இன்பத்தின் சிறப்பை அறியமாட்டார். திறம் இரங்கி-(காதலருள் ஒருவர்) பிரிவால் வருந்தி, ஊடி உணர்வாரே -புலந்து தெளிபவரே, ஈடிலது ஏர்-ஒப்பில்லாததாகிய சிறப்புப்பொருந்திய, இன்பவிருந்து-இன்பவிருந்தினை. பல்காலம்-நெடுங்காலம், மிசைவர்-துய்ப்பர்.

பொழிப்புரை:-(பலிபிடுங்கால்) ஒலிக்கின்ற பறைகள் பலியிட்ட ஊனின் சிறப்பை அறியமாட்டா; (அது போல), காமத்தை வெளிப்படச் சொல்லுகின்ற நாவினையுடையவரும் இன்பத்தின் சிறப்பை அறியமாட்டார். (காதலருள் ஒருவர் பிரிவால் வருந்திப் புலந்து தெளிபவரே ஒப்பில்லாததாகிய சிறப்புப் பொருந்திய இன்ப விருந்தினை நெடுங்காலம் துய்ப்பர்.

கருத்துரை :—காமத்தை வெளியிட்டுப் பேசுபவர் அதன் சுவையை அறியமாட்டார்; காமத்தை உள்ளடக்கிப் புலந்து தெளிபவரே அச்சுவையை அறிவர்.

விசேடவுரை :—அகத்திலுள்ள வேட்கையை வெளியிடுந்தோறும் அதன் ஆற்றல் குறையும் என்பது இறையனாரகப் பொருளுக்கு நக்கீரனார் உரைத்துள்ள உரையிற்கண்ட "மூடி வேவாநின்றதோர் பொருளை மூய்த் திறந்தவிடத்து அகத்துநின்ற வெப்பம் குறைபடும்" என்பதனாலும் விளங்கும். "கயங்கெழு நறுமலர் கயங்குருவகைப், பயங்கெழு தேனுகர் சுரும்பின் பான்மைபோல், வயங்கிழை மகளிரை மனந்திருத்தியே, முயங்கினர்க் கன்றிமற் றின்பமுற்

-றுமோ".—பிரமோத்தர காண்டம். "ஊடுதல் காமத்திற் கின்பம்; அதற்கின்பம், கூடி முயங்கப் பெறின்".—திருக்குறள். "தாம்வீழ்வார் தம்வீழப் பெற்றவர் பெற்றுரே, காமத்துக் காழில் கனி".—திருக்குறள். 'தாம்' என்பது அசை: 'பிறங்க என்பது ஈற்றகரம் கெட்டுநின்றது. 'அஃது' என்னும் சுட்டுப் பெயர் காணுமையைச் சுட்டிநின்றது. அதன் ஏகாரம் தேற்றம். உணர்வாரே என்பதன் ஏகாரம் பிரிநிலை. (௬)

உ௬. தோற்றுரே வெல்வர் துணைமிசையார் கோட்டியானை
யேற்றுக் கழறொடியார் மிக்காரை யாவரைவர்
போற்றளி கூடல் கரி.

அநுவயம் :—தோற்றுரே வெல்வர்; கோட்டு யானை ஏற்றுக் கழல் தொடியாராய் மிக்காரைத் துணை மிசையார் யா வரைவர்? போற்று அளியால் கூடல் கரி.

பதவுரை :—கோட்டு யானை ஏற்று-கொம்புகளையுடைய யானையை ஒத்து, கழல் தொடியார்-வெற்றித் தண்டையையும் வளையையும் புனைந்து, மிக்காரை-வலியின்மிக்க மகளிரை, துணைமிசையார்-(யானைக் கொம்புபோன்ற) துணையை இல்லாதாராகிய ஆடவர், யா வரைவர்-எங்ஙனம் வெல்வர்? (ஆனல்), தோற்றுரே வெல்வர் - (புலவியின்கண்ணே) தோற்றவரே வெற்றியடைவர்; போற்று அளி கூடல் கரி-(தோற்ற பின்னர் தோற்றவரை மற்றையார்) போற்றும் அன்

பால் கூடுதலே (தோற்றாரே வெல்வரென்பதற்குச்) சான்று.

பொழிப்புரை :—கொம்புகளை உடைய யானைகளை ஒத்து, வெற்றிக்கழலையும் வளையையும் புனைந்து வலி யின்மிக்க மகளிரை (யானைக் கொம்புபோன்ற) துணை யை இல்லாதாராகிய ஆடவர் எங்ஙனம் வெல்வர்? ஆனால், (புலவியின்கண்) தோற்றவரே வெற்றியுடை வர்; (தோற்றபின்னர்த் தோற்றவரை மற்றையார்) போற்றும் அன்பால் கூடுதலே (தோற்றவர் வெல்வ ரென்பதற்குச்) சான்று.

கருத்துரை :—காதலர் இருவருள்ளும் தோன்றும் புலவியின்கண்ணே தோற்றவரே மிக்க இன்பம் அடை வர்.

விசேடவுரை :—" ஊடலிற் றோற்றவர் வென்றார் அதுமன்னும், கூடலிற் காணப் படும்."—திருக்குறள். இவ்வெண்பா மூன்றடியால் வந்தமையின் சிந்தியல் வெண்பா. (௭)

௩௭. காதல் விரிநிலத் தாரா வகைகாணார்
சாதனன் றென்ப தகைமையோர்—காதலு
மாக்கி யளித்தழிக்குங் கந்தழியின் பேருருவே
நோக்கிலரை நோவதெவன்.

அநுவயம் :—விரிந்த நிலத்துக் காதலது ஆரா வகையைக் காணார் சாதல் நன்று என்ப. தகைமையோ ரது காதலும் ஆக்கி அளித்து அழிக்கும் கந்தழியின் பேர் உருவே; நோக்கு இலரை நோவதால் என்ன?

பதவுரை :—விரிந்த நிலத்து-அகன்ற (இவ்) உலகின்கண், காதல் - இன்பத்தினது, ஆரா-பெருகும், வகை காணார்-தன்மையினை அறியாதார், சாதல்-(காம இன்பத்திற்காக வாழ்தலினும்) இறத்தல், நன்று என்ப-நன்மை என்பர். தகைமையோர்-(ஒருவருக்கொருவர்) தகுதியான காதலருடைய, காதலும்-இன்பமும், ஆக்கி அளித்து அழிக்கும்-(உலகங்களையெல்லாம்) சிருட்டித்து இரட்சித்துச் சம்மரிக்கும், கந்தழியின்-கடவுளது, பேர் உருவே-பெரிய உருவேயாம். நோக்கு இலரை-(இவ்வுண்மையை அறியும்) அறிவில்லாதவரை, நோவது-நொந்துகொள்வதால், எவன்-யாது (பயன் உண்டாகும்)?

பொழிப்புரை :—அகன்ற (இவ்) உலகின்கண் இன்பத்தினது பெருகும் தன்மையினை அறியாதார் (காம இன்பத்திற்காக வாழ்தலினும்) இறத்தல் நன்மை என்பர். (ஒருவருக்கொருவர்) தகுதியான காதலருடைய இன்பமும் (உலகங்களையெல்லாம்) சிருட்டித்து இரட்சித்து சம்மரிக்கும் கடவுளது பெரிய உருவேயாம். (இவ்வுண்மையை அறியும்) அறிவில்லாதாரை நொந்து கொள்வதால் யாது (பயன் உண்டாகும்)?

கருத்துரை :—தகுதியான காதலர் அநுபவிக்கும் இன்பமும் கடவுளுடைய உருவமாதலால் அது வெறுக்கத்தக்க தன்று.

விசேடவுரை :—"பொய்மை யுற்றிடு கானலைப் புனலென விரும்பிக், கைமிசைக் கொண்ட வமிழ்தினைக்

சமருகுத் தாங்கு, மெய்மை யிற்சில ருண்டெனும் வீடு பே றுன்னி, யிம்மை யிற்பய னிழக்குதி நன்றுநின் னெண்ணம்." "மறுவிலாதவாண் மதிமுக மடந்தை யர் புணர்ப்பைச், சிறியவின்பமென் றுரைசெய்வ ரன்னதன் சிறப்பை, யறிவரேயெனி னுங்கதே பே ரின்ப மாகு, மிறைவநீயது கேட்டியேன் மொழிகுவ லென்றான்".—இவை கந்தபுராணம். (௪௧)

௩௪. அளகு மளிநாகைப் பேண வணியா
ரழகரிவை வீழ் முயக்கை யண்ணாத்-தளியாளர்
பெற்ற பிறக்கெறிந்து புத்தாய பெட்டுழலும்
பெற்றியர் பெட்ட கழுது.

அநுவயம் :—அளகும் அளியால் நாகைப் பேண, அணி ஆர் அழகு அரிவை வீழும் முயக்கை அண்ணாத் தளியாளர், பெற்ற பிறக்கு எறிந்து புத்தாய பெட்டு உழலும் பெற்றியர். (அவர்) பெட்ட கழுது.

பதவுரை :—அளகும்-சேவலும், அளி-அன்பால், நாகை-(தனது) பெட்டையை, பேண-(கூடிவாழ்ந்து) இன்பமுற,அணிஆர்-அணிகள் ஆர்ந்த, அழகு-அழகை யுடைய, அரிவை-அரிவையரை, வீழ் முயக்கை-விரும் பிக் (கூடும்) கூட்டத்தை, அண்ணா-பொருந்தாத, தளி ஆளர்-சாப்பாட்டுப்பிரியர், பெற்ற-(தம் கையில்) பெற்ற அரிய பொருள்களை, பிறக்கு எறிந்து-பின்னால் எறிந்துவிட்டு, புத்தாய-புதிய பொருள்களை, பெட்டு உழலும்-பெறவிரும்பித் துன்பம் உறும், பெற்றியர்-தன்மையராவர். (அவர்) பெட்ட கழுது-அவர் (பெற்ற

பொருள்களை அநுபவியாது மேலும் மேலும் பெற விரும்பும்) ஆசைமிக்க பேயை ஒப்பர்.

பொழிப்புரை :-சேவலும் அன்பையுடைய (தனது) பெட்டையைக் (கூடிவாழ்ந்து) இன்பமுற, அணிகளை யும் அழகையும் பொருந்திய அரிவையரை விரும்பிக் கூடும் கூட்டத்தை விரும்பாத சாப்பாட்டுப் பிரியர், தம்கையில் பெற்ற அரியபொருள்களைப் பின்னால் எறிந்துவிட்டுப் புதிய பொருள்களைப் பெற விரும்பித் துன் பம் உறும் தன்மையராவர். அவர் (பெற்ற பொருள் களை அநுபவியாது மேலும் மேலும் பெற விரும்பும்) ஆசைமிக்க பேயை ஒப்பர்.

கருத்துரை :—இல்வாழ்க்கை இன்பத்தை அநுப வியாது துறவின்பத்தை அடைய விரும்புபவர் பேரா சைகொண்ட பேய்களோ டொப்பர்.

விசேடவுரை :—அணியும் அழகு முடைய அரி வையர் என்றது செயற்கை யழகும் இயற்கை யழ கும் பொருந்தியவரென்பதைக் காட்டுதற்கே. மெய்யா ன துறவியரா யிருந்தால், உணவையும் துறக்கவேண்டு மென்பதைக் குறிக்கவே "தனியாளர்" என்றார். "தாம்வீழ்வார் மென்றோட் டுயிலி னினிதுகொல், தாம ரைக் கண்ணா னுலகு".—திருக்குறள். (௯௨)

இன்பப்பால் முற்றிற்று.

---

## வீட்டுப்பால்.

'வீட்டுப்பால்' என்பது 'வீட்டைப்பற்றிக் கூறும் பகுதி' எனப் பொருள்படும். இன்பத்தை அநுபவித்து விடுத்த பின்னரே அடையப்படுவதாதலால், வீடு முடிவின்கண் கூறப்பட்டது. 'வீட்டிலக்கப்பால்' என்றும் பாடம்.

### இல்லியல்.

இல்லியல்' என்பது 'இல்லற வியல்பு' எனப் பொருள்படும். 'இல்' என்பது ஆகு பெயராய் ஈண்டு இல்லறத்தை உணர்த்தி நின்றது.

கஉ. ஒத்த வுரிமையளா வூடற் கினியளாக்
குற்ற மொரூஉங் குணத்தளாக்—கற்றறிஞர்ப்
பேணுந் தகையளாக் கொண்கன் குறிப்பறிந்து
நாணுந் தகையளாள் பெண்.

அநுவயம் :—ஒத்த உரிமையளாக ஊடற்கு இனியளாகக் குற்றத்தை ஒரூஉம் குணத்தளாகக் கற்று அறிஞரைப் பேணும் தகையளாகக் கொண்கனது குறிப்பை அறிந்து நாணும் தகையள், ஆள் பெண்.

பதவுரை :—ஒத்த உரிமையளாக—(வயது, கல்வி, செல்வம் முதலியவற்றில் கணவனுக்கு) ஒப்பான உரிமையை யுடையவளாகவும், ஊடற்கு இனியளாக்-புலத்தற்கு இனிமையை யுடையவளாகவும், குற்றம் ஒரூஉம் குணத்தளாக-குற்றங்கள் நீங்கும் குணங்களையுடையவ

ளாகவும், கற்று அறிஞர்பேணும் தகையளாக (இலக்கிய இலக்கணங்களைக்) கற்று அறிஞரானோரை உபசரிக்கும் தன்மையை யுடையவளாகவும், கொண்கன் குறிப்பு அறிந்து நாணும் தகையள்-கணவனது நோக்கத்தை அறிந்து பணிந்து ஒழுகும் தன்மையை யுடையவள், ஆள் பெண்-(இல்லறத்தை) ஆளும் பெண்ணவள்.

பொழிப்புரை :—(வயது, கல்வி, செல்வம் முதலியவற்றில் கணவனுக்கு) ஒப்பான உரிமையையுடையவளாகவும், புலத்தற்கு இனிமையை யுடையவளாகவும், குற்றங்கள் நீங்கும் குணங்களை யுடையவளாகவும், (இலக்கிய இலக்கணங்களைக்) கற்று அறிஞரானோரை உபசரிக்கும் தன்மையை யுடையவளாகவும், கணவனது நோக்கத்தை அறிந்து பணிந்து ஒழுகும் தன்மையை யுடையவள், இல்லறத்தை ஆளும் பெண்ணவள்.

கருத்துரை :—ஈண்டுக் கூறிய இலட்சணங்களை யுடையவளே இல்லறத்தை நடத்துவதற்குத் தக்கவள்.

விசேடவுரை :—வயது, கல்வி, செல்வம் முதலியவற்றில் தலைவனோடு தலைவி ஒத்த உரிமையையுடையளாயிருத்தல் வேண்டுமென்பது "பிறப்பே குடிமை ஆண்மை ஆண்டொடு, உருவு நிறுத்த காம வாயில், நிறையே அருளே உணர்வொடு திருவென, முறையுறக் கிளந்த ஒப்பினது வகையே" என்னும் தொல்காப்பியச் சூத்திரத்தாலும், அவள் ஊடற்கு இனியளாயிருத்

தல் வேண்டு மென்பது "நலத்தகை நல்லவர்க் கேளர் புலத்தகை, பூவன்ன கண்ணா ரகத்து" என்னும் திருக் குறளாலும், அவள் தனது கணவனுடைய குறிப்பறிந் தொழுகுதலும் நாணுதலும் வேண்டுமென்பது "கொண் டான் குறிப்பறிவாள் பெண்டாட்டி" என்னும் திரிகடு கத்தாலும் "கொண்டான் குறிப்பொழுகல் கூறிய நாணுடைமை, கண்டது கண்டு விழையாமை—விண்டு, வெறுப்பன செய்யாமை வெஃகாமை நீக்கி, உறுப்போ டுணர்வுடையாள் பெண்" என்னும் அறநெறிச்சாரத் தாலும், அவள் குற்றம் ஒரூஉம் குணத்தளா யிருத்த வேண்டு மென்பது "மனைத்தக்க மாண்புடைய ளாகித் தற்கொண்டான், வளத்தக்காள் வாழ்க்கைத் துணை" என்னும் திருக்குறளாலும், அவள் கற்றறிஞரைப் பேணும் தகையளா யிருத்தல் வேண்டு மென்பது "அறந்த வாத்தம தன்ப ரருளினல், துறந்து ளோர் பிறப் போர்தொழில் செய்குநர், சிறந்த தொல்குலத் தெய்வம் பசுவிருந், திறந்து ளோர்க்கும் பகுத்தினி துண்பரால்" என்னும் காசிகண்டத்தாலும் விளங்கும். 'கற்றறிஞர்ப் பேணுந் தகையளா' என்பதற்குப் 'பல நூல்களையும் (அவள்) கற்று அறிஞரைப் பேணும் தன்மையையுடையளாக' என்னும் பொருளும் அமைந் திருத்தல் காண்க. 'கொண்கன் குறிப்பறிந்து நாணுந் தகையள்' என்பதற்குக் 'கணவனுடைய நோக்கத் தின்படி ஒழுகி (ப்பிற ஆடவரைக் காணின்) நாணுந் தன்மை யுடையள்' என்றுரைப்பினும் அமையும்.

'உரிமையளாக,' 'இனியளாக,' 'குணத்தளாக,' 'தகையளாக' என்பன ஈறு கெட்டு நின்றன. (க)

கக. மனைக்கொளிசேய் நாற்பணியோன் நாரப் புலக்கார்
வினைக்கொளியாங் கட்கா மனலி—முனைக்கஞ்சா
வீர ரொளியா மடமே யரிவையர்க்கா
மேரொளியா மில்லுடையான் றுப்பு.

அநுவயம் :— மனைக்குச் சேய் ஒளி (யாம்); நாரம் புலத்திற்கு ஆர் வினைக்கு நால் பணியோன் ஒளியாம்; கட்கு அனலி (ஒளி) யாம்; முனைக்கு அஞ்சா வீரர் ஒளியாம்; அரிவையர்க்கு மடமே (ஒளி) யாம்; இல்லுடையான் துப்பிற்கு ஏர் ஒளியாம்.

பதவுரை :—மனைக்கு சேய் ஒளி-இல்லறத்திற்குக் குழந்தை விளக்காம்; நாரம் புலத்திற்கு ஆர் வினைக்கு நால் பணியோன் ஒளியாம்-ஈரம் (பொருந்திய) நன்செய்க்கு இயையும் பயிர்த்தொழிலுக்கு நால்வகைப் பணிகளையும் செய்வோன் விளக்காம்; கட்கு அனலி (ஒளி) யாம்-கண்ணிற்குச் சூரியன் விளக்காம்; முனைக்கு அஞ்சா வீரர் ஒளியாம்-போர்முனைக்கு (மரணத்திற்கு) அஞ்சாத படைவீரர் விளக்காம்; அரிவையர்க்கு மடமே (ஒளி) யாம்-பெண்களுக்கு மடமையே விளக்காம்; இல்லுடையான் துப்பு ஏர் ஒளியாம் - இல்வாழ்வானது வலிமைக்கு உழவுதொழில் விளக்காம்.

பொழிப்புரை :—இல்லறத்திற்குக் குழந்தை விளக்காம்; ஈரம் பொருந்திய நன்செய்யின்கண் செய்யப்ப

டும் பயிர்த்தொழிலுக்கு நால்வகைப் பணிகளையும் செய்வோன் விளக்காம்; கண்ணிற்குச் சூரியன் விளக்காம்; போர்முனைக்கு (மரணத்திற்கு) அஞ்சாத படைவீரர் விளக்காம்; பெண்களுக்கு மடமையே விளக்காம்; இல்வாழ்வானது வலிக்கு உழவுதொழிலே விளக்காம்.

கருத்துரை :—வீட்டிற்குக் குழந்தையும், நன்செய்க்கு நால்வகைப் பணியோனும், கண்ணிற்குச் சூரியனும், போர்முனைக்கு அஞ்சாத வீரரும், பெண்களுக்கு மடமும், இல்வாழ்வானுக்கு உழவும் சிறப்பாம்.

விசேடவுரை :—மனைக்குச் சேய் ஒளி என்பது "மைந்தன் மனைக்கு மணி" என்னும் நீதிவெண்பா அடியாலும் விளங்கும். நால்வகைப் பணியாவன, உழுதலும் எருவிடுதலும் நீர்பாய்ச்சலு கதிர்காத்தலுமாம். "ஏரினும் நன்றால் எருவிடுதல் கட்டபின், நீரினு நன்றதன் காப்பு" என்று பொய்யாமொழியாரும் கூறினர். கண்ணிற்குச் சூரியன் ஒளி என்பது "இருவிழிகள் வாண்முகத்தில் இருந்தாலும் வானிரவி எழுந்தாலன்றிக், கருதுநிலைப் பல்பொருளும் காண்டலரிதாம்" என்னும் திருக்குற்றாலப் புராண அடிகளால் விளங்கும். போர்முனைக்கு அஞ்சாவீரர் ஒளி என்பது "உறினுயிர் அஞ்சா மறவர் இறைவன், செறினும் சீர் குன்றல் இலர்" என்னும் திருக்குறளால் விளங்கும். இறையனாரகப்பொருளுக்கு நக்கீரனார் உரைத்த உரையில் "தலைமகட்கு நாண், மடம், அச்

சம், பயிர்ப்பு என்பன குணம் " என்று கூறியுள்ளதால், மடமும் மாதர்க்கு அழகு என்பது விளங்கும். "மடமென்பது கொளுத்தக் கொண்டு கொண்டது விடாமை" என்றார் நக்கீரர். அஃதாவது, 'அறிவுறுத்த அறிவுற்று அறிந்ததை விடாமை'. இல்வாழ்வானுக்கு உழவு தொழில் வலி என்பது "உழுவார் உலகத்தார்க் காணி அஃ தாற்றாது, தொழுவாரை யெல்லாம் பொறுத்து" என்னும் திருக்குறளால் விளங்கும். 'புலத்திற்கு' என்பது 'புலக்கு' என விகாரப்பட்டு நின்றது. 'வர்' என்பது ஆகுபெயர், அஃது ஈண்டு உழவுதொழிற் காயினமையால். (உ)

௩௪. எய்ப்பில்வைப் பாக வருவாயி லைந்தொன்றை
மெய்ப்பிணி சேய்வரைவிற் கூட்டிடுக-கைப்பொருள்வா
யிட்டிலுய் வாயிடுக்க வீங்க விழையற்க
வட்டன் மனைக்கிழவன் மாண்பு.

அநுவயம் :—கைப்பொருள் வாய் இட்டில், உய்யும் வாயை இடுக்க ; வீங்க விழையற்க ; வட்டல் மனைக் கிழவன் மாண்பு. (ஆதலால்,) வருவாயில் ஐந்தில் ஒன்றை மெய்ப்பிணியிலும் சேய்/வரைவிலும் எய்ப்பிலும் வைப்பு ஆகக் கூட்டிடுக.

பதவுரை :—கைப் பொருள் வாய் இட்டில்-கையின் கண் பொருள்கள் வரும்வழிகள் சுருங்கின், உய்வாய் இடுக்க-(கைப் பொருள்கள் தன்னை விட்டுச்) செல்லும் வழிகளைச் சுருக்குக; வீங்க விழையற்க-அளவிற்கு மிஞ்

சின செலவுசெய்ய விரும்பற்க; வட்டல் மனைக்கிழவன் மாண்பு-பொருளைத் திரட்டுதல் இல்வாழ்வானது இலட்சணமாகும். (ஆதலால்), வருவாயில் ஐந்து ஒன்றை-தனது வரும்படியில் ஐந்திலொரு பாகத்தை, மெய்ப் பிணி சேய் வரைவில் எய்ப்பில் வைப்பு ஆக-சரீரத்தின் கண் வியாதியுற்ற காலத்திலும் மக்களது விவாக காலத்திலும் (விர்த்தாப்பியத்தால்) தளர்ச்சியுற்ற காலத்திலும் உதவும் சேமநிதியாக, கூட்டிடுக-சேர்த்திடுக.

பொழிப்புரை :—இல்வாழ்வான் தன் கையின்கண் பொருள்கள் வரும் வழிகள் சுருங்கின், (கைப் பொருள்கள் தன்னைவிட்டுச்) செல்லும் வழிகளைச் சுருக்குக; அளவுக்கு மிஞ்சின செலவு செய்ய விரும்பற்க; பொருளைத் திரட்டுதல் இல்வாழ்வானது இலட்சணமாகும். (ஆதலால்), தனது வரும்படியில் ஐந்திலொரு பாகத்தைச் சரீரத்தின்கண் வியாதியுற்ற காலத்திலும் மக்களது விவாக காலத்திலும் (விர்த்தாப்பியத்தால்) தளர்ச்சியுற்ற காலத்திலும் உதவும் சேமநிதியாகச் சேர்த்திடுக.

கருத்துரை :—வரவு சுருங்கின், செலவைச் சுருக்கல் வேண்டும்; ஆடம்பரங்கள் செய்யலாகாது. தத்தம் வருவாயின் ஐந்திலொரு பாகத்தை மீதப் படுத்திச் சேம நிதியாக வைத்திருத்தல் வேண்டும்.

விசேடவுரை:—" பூரியர் தமைவேங் தாக்கும் புவி புரப் பிக்கும் துய்க்கும், சீரிய வுண்டி சேர்க்கும் தேவர் தம் முலகம் போக்கும், காரிய மனைத்துங் கூட்டும் கருதலர் தம்மை வாட்டும் கூரிய திதன்மே லில்லை தொழும்

பொனீர் கொண்மி னென்றார்" என்று கம்பநாட்டாழ்வா ரும் கூறியுள்ளதால் இல்வாழ்வார் பொருளைத் திரட்டுதல் வேண்டும். வருவாய் சுருங்கின் செலவைச் சுருக்கவே ண்டு மென்பது "ஆகா றளவிட்டி தாயினும் கேடி ல்லை, போகா றகலாக் கடை" என்னும் திருக்குறளா லும், அளவிற்கு மிஞ்சின செலவு செய்யலாகா தென் பது "அளவறிந்து வாழாதான் வாழ்க்கை உள்போல, இல்லாகித் தோன்றாக் கெடும்" என்னும் திருக்குறளா லும் விளங்கும். "வருவாயுட் கால்வழங்கி வாழ்தல்" என்றார் திரிகடுகத்தில். அவர் கருத்து நாலில் ஒரு பங்கை அறத்திற்கு உபயோகித்தல் வேண்டும்; ஒரு பங்கை மீதம் பிடித்தல்வேண்டும்; இரண்டு பங்கைச் செலவிட ல்வேண்டுமென்பது. பொருளை திரட்டுதல் வேண்டு மென்பது "வடுவிலா வையத்து மன்னிய மூன்றின், நடு வண தெய்த விருதலையும் எய்தும், நடுவண தெய்தா தான் எய்தும் உலைப்பெய், தடுவதீ போலும் துயர்" என் னும் நாலடியால் விளங்கும். அரசிறை செலுத்தியே தீர வேண்டுவ தொன்றாதலின், அஃதொழிந்து நின்ற ஐந்து பாகத்தை வருவா யென்றார். (ரு)

௬. ஐம்புலத்தோர் நல்குரவோ ரோம்பித் தலைப்பட்ட
செம்பாக நன்மனையைப் பேணிக்-கடாவுய்த்த
வைம்பு னிலைபேணி யூழ்ப்ப வடுவடா
ரைம்புலமீர்த் தாரிற் றலை.

அநுவயம்:—ஐம்புலத்தோரையும் நல்குரவோரை யும் ஓம்பித் தலைப்பட்டவற்றில் செம்பாகத்தால் நன்

மனையைப் பேணியும் கடாவை உய்த்த பைம்புல்லின்
நிலையைப் பேணியும் ஊழ்ப்ப வடு அடார் ஐம்புலத்தை
ஈர்த்தாரின் தலை.

பதவுரை:—ஐம்புலத்தோர்-ஐந்து நிலத்தவரையும், நல்குரவோர் - தரித்திரரையும், ஓம்பி-(வைப்புப்போக நின்ற பொருளின் ஒரு கூறுகொண்டு) பேணி, தலைப் பட்ட-(தம்மைச்) சேர்ந்த, செம்பாகம் நன்மனையைப் பேணி-செம்பாகத்தால் (தமது) நல்ல குடும்பத்தைப் பேணியும்; கடா உய்த்த பைம்புல் நிலை பேணி-பகட்டைச் செலுத்திய பசும்பயிர் வளரும் நிலங்களைப் பேணியும், ஊழ்ப்ப வடு அடார்-(தாம்) சிறக்கும்படி குற்றம் உறாது வாழ்பவர், ஐம்புலம் ஈர்த்தாரின் தலை-ஐம்புலங்களையும் கொன்றாரிற் சிறந்தவராவர்.

பொழிப்புரை :—ஐந்து நிலத்தவரையும் தரித்திரரையும் (வைப்புப் போக நின்ற பொருளின் ஒரு கூறு கொண்டு) பேணி, (தம்மைச்) சேர்ந்த செம்பாகத்தால் (தமது) நல்ல குடும்பத்தைப் பேணியும் பகட்டைச் செலுத்திய பசும்பயிர் வளரும் நிலத்தைப் பேணியும் (தாம்) சிறக்கும்படி குற்றம் உறாது வாழ்பவர், ஐம்புலங்களையும் கொன்றாரிற் சிறந்தவராவர்.

விசேடவுரை :—ஐந்து நிலத்தவர்-தென்புலத்தார், தெய்வம், விருந்து, ஒக்கல், தான். ஐம்புலங்கள்-சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம். செம்பாகம்-நேர்பாதி. நெறிப்படி வாழ்கின்ற இல்வாழ்வான் துறவியினும் சிறந்

தவனென்பது "தென்புலத்தார் தெய்வம் விருந்தொக் கல் தானென்றாங், கைம்புலத்தார் ஓம்பல் தலை," "இயல் பினான் இல்வாழ்க்கை வாழ்பவ னென்பான், முயல்வாரு ளெல்லாம் தலை" என்னும் திருக்குறள்களாலும் விளங் கும். ஐம்புலத்தைக் கொல்லலாவது, ஐம்புலங்களையும் வெல்லுதல். "அடல்வேண்டும் ஐந்தன் புலத்தை" என்றார் வள்ளுவனாரும். "அடாஅ" என்றும் பாடம். (௩)

௩௬. உள்ளவா சேற லியைபெனினும் போவாய
வெள்ளத் தனசேறல் வேண்டன்—மனைக்கிழவ
னள்ளளவின் மிக்காய காற்றொழிலை யோம்பலே
தெள்ளறிஞர் கண்ட நெறி.

அநுவயம் :— உள்ளவாறு சேறல் இயைபு எனி னும், போம்வாய வெள்ளத்தன சேறல் வேண்டல். மனைக்கிழவன் நள்ளும் அளவின் மிக்காய கால் தொழிலை ஓம்பலே தெள் அறிஞர் கண்ட நெறி.

பதவுரை :— உள்ளவாறு - தன்னிடத்திலுள்ள பொருளுக்குத் தக்கபடி, சேறல் - ஒழுகுதல், இயைபு எனினும் - பொருத்த மென்றாலும், போம்வாய-செலவு கள், வெள்ளத்தன - வெள்ளத்தைப் போல, சேறல் வேண்டல்- நடத்தலை விரும்பற்க. மனைக்கிழவன் -இல் வாழ்வான், நள்ளும் அளவின் மிக்காய - விரும்பத்தக்க அளவிற்கு மேற்பட்ட, கால்தொழிலை-முயற்சியை, ஓம் பலே - விலக்குதலே, தெள் அறிஞர்-தெளிந்த அறி வாளிகள், கண்ட நெறி-கூறிய வழியாம்.

பொழிப்புரை:—தன்னிடத்திலுள்ள பொருளுக்குத் தக்கபடி ஒழுகுதல் பொருத்த மென்றாலும், செலவுகள் வெள்ளத்தைப் போல நடத்தலை விரும்பற்க. இல்வாழ் வான் விரும்பத்தக்க அளவிற்கு மேற்பட்ட முயற்சியை விலக்குதலே தெளிந்த அறிவாளிகள் கூறிய வழியாம்.

கருத்துரை:—பெருஞ்செல்வ முடையரேனும் பெருவீரியான செலவுகளையாவது தம்மால் முடிக்க முடி யாத பெரு முயற்சிகளையாவது செய்யற்க.

விசேடவுரை :—ஊதியத்தோடு முதலையும் அழிக் கும் செலவுகளைச் செய்யலாகா தென்பதைக் குறிக் கவே, உள்ள நீரையும் கொண்டு போகும் வெள்ளத் தைப் போன்ற செலவுகளை விரும்பற்க என்றனர். " ஆக்கம் கருதி முதலிழக்கும் செய்வினை, ஊக்கார் அறி வுடையார்" என்றார் திருவள்ளுவரும். தம்மால் முடிக்க முடியாத முயற்சிகளைச் செய்யலாகாதென்பது " உடைத் தம் வலியறியார் ஊக்கத்தின் ஊக்கி, இடைக்கண் முறிந் தார் பலர்" என்னும் திருக்குறளாலும் " நெடிதுபற்றி கல் செல்லினும் நிரம்புவ தொன்றை, இடைவிடாமலே முயன்றுபெற் றிடுகின்ற தியற்கை, உடல்வருந்தியும் தங் களால் முடிவுறா தொன்றை, முடியுமீதெனக் கொள்வது கயவர்தம் முறையே" என்னும் கந்தபுராணத்தாலும் விளங்கும். " உள்ளவாறு" என்பது ஈறு கெட்டும், 'போம் வாய' என்பது 'போவாய' எனவும் " வெள் ளத்தை அன்ன" என்பது 'வெள்ளத்தன' எனவும் விகாரப்பட்டும் நின்றன. (ரு) (௫).

௬௭. ஐங்குரவ ரோம்ப லினனீக்கல் சேர்ந்தோர்க்கும்
பைங்கூழ் களைகளைப் பார்த்தளித்த—னையுளத்தார்க்
குற்ற பரிவீர்த்த லெண்ணான் கறநெறியி
லுற்ற புரிதல் கடன்.

அநுவயம் :—ஐங்குரவர் ஓம்பல், சேர்ந்தோர்க்கும் இன்னல் நீக்கல், பைங்கூழ் களைகளைப் பார்த்து அளித்தல், நை உளத்தார்க்கு உற்ற பரிவு ஈர்த்தல், எண்ணான்கு அறநெறியில் உற்ற புரிதல் கடன்.

பதவுரை :—ஐங்குரவர் ஓம்பல்-ஐங்குரவரையும் பேணுதல், சேர்ந்தோர்க்கும் இன்னல் நீக்கல் - தஞ்சமெனத் தன்பால் வந்து அடைந்தார்க்கும் அவரது துன்பத்தை நீக்குதல், பைங்கூழ் களைகளை பார்த்து அளித்தல்-பசிய பயிர்களை ஆதரவாகப் பார்த்துப் பாதுகாத்தல், நை உளத்தார்க்கு உற்ற பரிவு ஈர்த்தல் - வருந்துகின்ற மனத்தை யுடையார்க்கு நேர்ந்த துன்பத்தை நீக்குதல், எண் நான்கு அற நெறியில் உற்ற புரிதல்-முப்பத்திரண்டு தரும வழிகளிலும் பொருந்தியவற்றைச் செய்தல், கடன்-(இல்வாழ்வானது) கடமையாகும்.

பொழிப்புரை :—ஐங்குரவரையும் பேணுதல், தஞ்சமெனத் தன்பால் வந்து அடைந்தார்க்கும் அவரது துன்பத்தை நீக்குதல், பசிய பயிர்களை ஆதரவாகப் பார்த்துப் பாதுகாத்தல், வருந்துகின்ற மனத்தையுடையார்க்கு நேர்ந்த துன்பத்தை நீக்குதல், முப்பத்திரண்டு தரும வழிகளிலும் பொருந்தியவற்றைச் செய்தல் (இல்வாழ்வானது) கடமையாகும்.

கருத்துரை:—ஐங்குரவ ரோம்பல் முதலியன இல் வாழ்வானது கடைமையாம்.

விசேடவுரை :—ஐங்குரவர்-அரசன், உவாத்தியா யன், தந்தை, தேசிகன், மூத்தோன். முப்பத்திரண்டு அறநெறி யாவன:—“ ஆதுலர் சாலை சோலை யாவின்வா யுறைகண்ணடி, யோதுவார்க் குணவு தண்ணீ ருறுபந்தர் மடந்த டாகம், கோதிலா வுரிஞ்சி சுண்ணங் கொலையுயிர் விடுத்த லேறு, மாதலைக் கெண்ணெய் கண்ணோய் மரு ந்துநன் மகப்பால் சோறு”, “ அறுசமயத் தோர் க்குண்டி யழிந்தோரை நிறுத்த லட்டேண், பிறரறங் காத்தலையம் பெண்போக மகப்பே றுய்த்தல், நறியநீள் விலங்கூண் வண்ணா னாவிதன் சிறைச்சோ றுதி, மறுதலத் தறமெண் ணான்கு மனையறத் திவ்வூர்நல்கும்”.—திருக் குற்றாலப் புராணம். ‘ இன்னல் ’ என்பது ‘ இனல்’ என விகாரப்பட்டுநின்றது. ‘சேர்ந்தோர்க்கும் ’ என்பதன் உம்மை இறந்தததழீஇய வெச்சவும்மை, அது சுற்றத் தாரையும் தழுவி நிற்றலான். (௭௦)

௭௮. நல்லினஞ் சார னயனுணர்தல் பல்லாற்றா
னல்லின மோம்பல் பொறையாள—லொல்லும்வா
யின்னார்க் கினிய புரித னெறிநிற்ற
னன்னாப்ப னுய்ப்பதோ ராறு.

அநுவயம் :—நல் இனத்தைச் சார்தல், நயனை உண ர்தல், பல் ஆற்றால் நல் இனத்தை ஓம்பல், பொறையை ஆள்தல், இன்னார்க்கு ஒல்லும் வாய் இனியவற்றைப் புரி தல்,நெறியில் நிற்றல்,நல் நாப்பண் உய்ப்பதற்கு ஓர் ஆறு.

பதவுரை:—நல் இனம் சார்தல் - நல்ல ஒழுக்க முடையாரைப் பொருந்துதல், நயன் உணர்தல்-(நூல்கள் கூறும்) நீதியை உணர்தல், பல் ஆற்றால் நல் இனம் ஓம்பல் - பல வழிகளாலும் நல்ல ஒழுக்க முடையவரைப் பேணுதல், பொறை ஆளல் - பொறுமையைக் கைக் கொண்டு ஒழுகுதல், இன்னார்க்கு ஒல்லும் வாய் இனிய புரிதல்-தனக்குத் துன்பஞ் செய்தார்க்கும் இயலும் இட ங்களில் நன்மைகளைச் செய்தல், நெறி நிற்றல்-நல்ல நெறியில் ஒழுகுதல், நல் நாப்பண் உய்ப்பது ஓர் ஆறு-நல்ல நடுவிடத்தின்கண் கொண்டுபோய்ச் சேர்ப்பதற்கு ஒப்பற்ற வழிகளாம்.

பொழிப்புரை:—நல்ல ஒழுக்க முடையாரைப் பொருந்துதல், (நூல்கள் கூறும்) நீதியை உணர்தல், பலவழிகளாலும் நல்ல ஒழுக்கமுடையவரைப் பேணுதல், பொறுமையைக் கைக்கொண்டு ஒழுகுதல், தனக்குத் துன்பஞ் செய்தார்க்கும் இயலும் இடங்களில் நன்மைகளைச் செய்தல், நல்ல நெறியில் ஒழுகுதல், நல்ல நடுவிடத்தின்கண் கொண்டுபோய்ச் சேர்ப்பதற்கு ஒப்பற்ற வழிகளாம்.

கருத்துரை:—ஈண்டுக் கூறிய செயல்கள் முத்தியை அடைவிக்கும் நெறிகளாம்.

விசேடவுரை:—நல்ல நடுவிடம்-முத்தியுலகம். நல்லினத்தைச் சார்தல்வேண்டு மென்பது "நல்லாரைக் காண்பதுவும் நன்றே நலமிக்க, நல்லார்சொல் கேட்பதுவும் நன்றே—நல்லார், குணங்கள் உரைப்பதுவும் நன்றே

அவரோ, டிணங்கி யிருப்பதுவும் நன்று" என்னும் மூதுரையாலும், இன்னா செய்தார்க்கும் இனியவே செய்ய வேண்டு மென்பது " இன்னா செய்தார்க்கும் இனியவே செய்யாக்கால், என்ன பயத்ததோ சால்பு" என்னும் திருக்குறளாலும் விளங்கும். 'பொறையாள்தல்' எனவும் பாடம்' (7)

நஅ. முனியா னறமறங்கண் முக்குற்றம் பேணு
னனிகாக்கு மொண்மை யுறைப்படுத்தும் பண்போன்
பனிநிலத்தின் வித்தாய்ப் பெயரா னடுக்கற்
றினியனு வான்மற் றினி.

அன்வயம் :—அறத்தை முனியான், மறங்களையும் முக்குற்றங்களையும் பேணுன், நனி காக்கும் ஒண்மையினை உறைப்படுத்தும் பண்போன், பனி நிலத்தின் வித்தாய், பெயரான் நடுக்கற்று இனி இனியனுவான்.

பதவுரை :—அறம் முனியான்-தருமத்தை வெறுக்காதவனாய், மறங்கள் முக்குற்றம் பேணுன்-அதருமங்களையும் முக்குற்றங்களையும் விரும்பாதவனாய், நனி காக்கும்-மிகவும் பாதுகாக்கப்படும், ஒண்மை உறைப்படுத்தும் பண்போன்-அறிவை நிலைப்படுத்தும் ஒழுக்கத்தையுடையோன், பனி நிலத்தின் வித்தாய்-குளிர்ந்த நிலத்தைச் சேர்ந்த வித்தைப் போன்றவனாய், பெயரான்-நின்ற நிலையைவிட்டு அசையாதவனாய், நடுக்கு அற்று-அச்சம் நீங்கி, இனி இனியனுவான்-இப்பிறப்பிலேயே பேரின்பத்தை யுடையவனுவான்.

பொழிப்புரை :—தருமத்தை வெறுக்காதவனும், அதருமங்களையும் முக்குற்றங்களையும் விரும்பாதவனும், மிகவும் பாதுகாக்கப்படும் அறிவை நிலைப்படுத்தும் ஒழுக்கத்தையுடையோன், குளிர்ந்த நிலத்தைச் சேர்ந்த வித்தைப்போன்றவனும், நின்ற நிலையை விட்டு அசையாதவனும், அச்சம் நீங்கி, இப்பிறப்பிலேயே பேரின்பத்தை யுடையவனுவான்.

கருத்துரை :—இச்செய்யுளில் கூறியபடி யொழுகுவோன் இப்பிறப்பிலேயே பேரின்பத்தை யடைவான்.

விசேடவுரை:—முக்குற்றமாவன:—காமம், வெகுளி, மயக்கம். முக்குற்றங்களையும் நீக்கினுன் பேரின்பத்தையடைவா னென்பது "காமம் வெகுளி மயக்கம் இவைமூன்றன், நாமம் கெடக்கெடும் நோய்" என்னும் திருக்குறளால் விளங்கும். 'இப்பொழுது' என்னும் பொருளைத்தரும் 'இனி' என்பது ஈண்டு 'இப்பிறப்பு' என்னும் பொருளைத் தந்து நின்றது. 'மற்று' என்பது அசை. (அ)

இல்லியல் முற்றிற்று.

---

## துறவியல்.

'துறவியல்' என்பது, 'துறவற வியல்பு' எனப் பொருள்படும். துறவு என்பது ஆகுபெயராய் ஈண்டுத் துறவறத்தை உணர்த்திநின்றது.

சல. முப்பாலை வீழ்வார் விலங்கார் செறும்பாலை
முப்பான் மயக்கேழ் பிறப்பாகி—யெப்பாலும்
மெய்ப்பொரு டேறார் வெளியோரார் யாண்டைக்
பொய்ப்பாலை யுய்வாயாப் போந்து. [கூம்

அநுவயம் :—முப்பாலை வீழ்வார் செறும்பாலை விலங்காராய், முப்பால் மயக்கால் ஏழ் பிறப்பாகி எப்பாலும் மெய்ப்பொருள் தேறாராய், பொய்ப்பாலை யாண்டைக்கும் உய்வாயாப் போந்து வெளியை ஓரார்.

பதவுரை :—முப்பாலை வீழ்வார்-(வீட்டைக் கருதாது) அறம் பொருள் இன்பங்களையே மேன்மேலும் விரும்பிநிற்போர், செறும் பாலை விலங்கார்-வருத்தும் பகுதியினவாகிய துன்பங்களினின்றும் நீங்காராய், முப்பால் மயக்கு-அம்முப்பால் மயக்கத்தால், ஏழ் பிறப்பு ஆகி-எழுவகைப் பிறப்புக்களும் உண்டாகப்பெற்று, எப்பாலும்-எவ்விடத்தும், மெய்ப்பொருள் தேறார்-உண்மைப் பொருளை அறியாராய்,பொய்ப்பாலை-பொய்ப்பகுதியனவாகிய அம்முப்பாலை, யாண்டைக்கும் உய்வாயாக போந்து-எவ்விடத்திற்கும் செலுத்தும் வழியாகக்கொண்டு, வெளி ஓரார்-பரவெளியை உணரமாட்டார்.

பொழிப்புரை :—(வீட்டைக் கருதாது) அறம்பொ

ருள் இன்பங்களையே மேன்மேலும் விரும்பி நிற்போர், வருத்தும் பகுதியினவாகிய துன்பங்களின்றும் நீங்கா ராய், அம்முப்பால் மயக்கத்தால் எழுவகைப் பிறப்புக் களும் உண்டாகப்பெற்று எவ்விடத்தும் உண்மைப் பொருளை அறியாராய், பொய்ப்பகுதியினவாகிய அம்முப பாலை எவ்விடத்திற்கும் செலுத்தும் வழியாகக் கொண்டு பரவெளியை உணரமாட்டார்.

கருத்துரை :—அறம் பொருள் இன்பங்களை விடாது பற்றி நிற்போர் மெய்ப்பொருளை உணரார்.

விசேடவுரை:—பரவெளி-சிதாகாயம். முப்பாலைப் பற்றி நிற்போர் துன்பங்களினின்று நீங்காரென்பது "பற்றி விடாஅ இடும்பைகள் பற்றினைப், பற்றி விடாஅ தவர்க்கு" என்னும் திருக்குறளாலும், முப்பால் மயக் கால் ஏழ் பிறப்பா மென்பது "பொருளல் லவற்றைப் பொருளென் றுணரும், மருளானா மாணாப் பிறப்பு" என்னும் திருக்குறளாலும் விளங்கும். ஏழ்பிறப்புக்களை "ஊர்வ பதினொன்றும் ஒன்பதூ மானுட, நீர்பறவை நாற்காலோர் பப்பத்தாம்—சீரிய, பந்தமாம் தேவர் பதினொ லயன்படைத்த, அந்தமில்சீர்த் தாவரநா லைந்து" என்பதால் அறிக. 'வீழ்வர்' எனவும் 'பேர்த்து' என வும் பாடம். (க)

சக. உண்மைமா னீர்த்து விருள்கடிந்து சாரையம்
புண்விலங்கச் சார்பொருளைப் போற்றினோர்-நுண்ணுணர்
னண்ணு நிலைப்படுவ ரற்றல் விழுப்புலனை [வா
யெண்பொருட் கூரியலைச் சார்ந்து.

அநுவயம் :—உண்மை மாலை ஈர்த்து, இருளைக் கடிந்து, சாரும் ஐயமும் புண்ணும் விலங்கச் சாரும் பொருளை நுண்ணுணர்வால் போற்றினோர், ஆற்றல் விழு ப்புலனையும் எண்ணும் பொருள் கூர் இயலையும் சார்ந்து அண்ணு நிலைப்படுவர்.

பதவுரை :—உண்மை மால் ஈர்த்து-மெய்யை மறைக்கும் மயக்கத்தைத் தொலைத்து, இருள் கடிந்து-அஞ்ஞானமாகிய இருளை நீக்கி, சார் ஐயம் புண் விலங்க-அடிக் கடி வந்து பொருந்தும் ஐயமும் துன்பமும் நீங்கும்படியாக, சார் பொருளை நுண் உணர்வால் போற்றினோர்-(எல்லாம்) சார்தற்கு ஆதாரமாயுள்ள பரம்பொருளை நுண்ணிய அறிவால் வழிபட்டோர், ஆற்றல் விழு புலனை-வலிபொருந்திய மேலான அறிவையும், எண் பொருள் கூர் இயலை-எண்ணப்படும் அப்பரம்பொருளின் நுண்ணிய தன்மையையும், சார்ந்து-பொருந்தி, அண்ணு நிலைப் படுவர்-அடைதற்கு அருமையான முத்திநிலையைப் பொருந்துவர்.

பொழிப்புரை :—மெய்யை மறைக்கும் மயக்கத்தைத் தொலைத்து, அஞ்ஞானமாகிய இருளை நீக்கி, அடிக் கடி வந்து பொருந்தும் ஐயமும் துன்பமும் நீங்கும்படியாக, (எல்லாம்)சார்தற்கு ஆதாரமாயுள்ள பரம்பொருளை நுண்ணிய அறிவால் வழிபட்டோர் வலிபொருந்திய மேலான அறிவையும், எண்ணப்படும் அப்பரம்பொருளின் நுண்ணிய தன்மையையும் பொருந்தி, அடைதற்கு அருமையான முத்திநிலையைப் பொருந்துவர்.

*கருத்துரை :—மயக்கத்தையும் அஞ்ஞானத்தையும் ஐயத்தையும் துன்பத்தையும் நீத்தவர் மெய்ப்பொருளை யுணர்ந்து வீடுபேற்றை அடைவர்.*

விசேடவுரை :—" இருள்நீங்கி யின்பம் பயக்கும் மருள்நீங்கி, மாசறு காட்சி யவர்க்கு." என்னும் திருக்குறளின் பொருள் ஈண்டுச் சிந்திக்கத்தக்கது. குற்றிய லுகரத்திற்குப்பின்னும் உயிர் வருங்கால் சிறுபான்மை வகரவுடம்படுமெய் தோன்றுமாதலால், 'ஈர்த்து' என்பதற்குப் பின்வந்த 'இருள்' என்பதன் இகரம் வகரவுடம்படுமெய் பெற்றுநின்றது. குற்றியலுகரத் திற்குப் பின்வரும் உயிர் வகரவுடம்படுமெய் பெற்று வருதலைப் பின்வரும் வெண்பாவில் காண்க :—

" ஆங்கு மலரும் குவியுமா லுந்திவாய், ஓங்கு கமலத் தின் ஒண்போது—வாங்கைத், திகிரி சுடரென்றும் வெண்சங்கம் வானில், பகரு மதியென்றும் பார்த்து."

இது முதலாழ்வார்களில் ஒருவராகிய பேயார் பாடியது. இதன் தனிச்சீரின் முதலிலுள்ள உயிரெழுத்து வகர வுடம்படு மெய்யைப் பெறுவிடின் வெண்பாத்தளை கெடும். " விளங்கும் " என்றும் பாடம். (உ)

சஉ. மாசகல வீறு மொளியன்ன நோன்புடையோர்
மூசா வியற்கை நிலனுணர்வா—ராசகற்றி
யின்ன லினிவாயாக் கொள்வார் பிறப்பிறப்பிற்
றுன்னு ரடையும் நிலன்.

அநுவயம் :— *மாசு அகல வீறும் ஒளியை அன்ன நோன்பை உடையோர், மூசா இயற்கை நிலனை உணர்*

வார் ; ஆசை அகற்றி இன்னலே இனியவாயாகக் கொள் வார் பிறப்பு இறப்பில் துன்னார் ; நிலனை அடையும்.

பதவுரை :—மாசு அகல - குற்றம் நீங்க, வீறும் ஒளியன்ன - மேன்மேலும் ஓங்கும் சுடர்ப் பிரகாசத்தை யொத்த, நோன்பு உடையோர்-தவத்தினை உடையோர், மூசா இயற்கை-அழியாத தன்மையை உடைய, நிலன் உணர்வார்-முத்தியுலகை உணர்வார்; ஆசு அகற்றி-தம் குற்றங்களை யெல்லாம் நீக்கி, இன்னல் - துன்பததை, இனிய வாயாக கொள்வார்-இனிய வழியாகக்கொள்பவர், பிறப்பு இறப்பில் துன்னார் - பிறப்பையும் இறப்பை யும் பொருந்தார் ; நிலன் அடையும்-முத்தி யுலகை அடைவர்.

பொழிப்புரை :—குற்றம் நீங்க மேன்மேலும் ஓங் கும் சுடர்ப்பிரகாசத்தை யொத்த தவத்தினை உடை யோர், அழியாத தன்மையை உடைய முத்தியுலகை உணர்வார் ; தம் குற்றங்களை யெல்லாம் நீக்கித் துன் பத்தை இனிய வழியாகக்கொள்பவர் பிறப்பையும் இற ப்பையும் பொருந்தார் ; முத்தி யுலகை அடைவர்.

கருத்துரை :—தவத்தையுடையோர் மெய்யுணர் ந்து வீடு பெறுவர்.

விசேடவுரை :—தவம் செய்வோர்க்கு மெய்யு ணர்வு வளருமென்பது, " சுடச்சுடரும் பொன்போல் ஒளிவிடும் துன்பம், சுடச்சுட நோற்கிற் பவர்க்கு " என்னும் திருக்குறளாலும், துன்பத்தை இன்பமாகக்

கொள்பவர் வீட்டையடைவ ரென்பது, " இன்னமை யின்ப மெனக்கொளி னருந்தன், மூன்றா விழையும் சிறப்பு " என்னும் திருக்குறளாலும் விளங்கும். 'இனிய' என்பதும் 'வாயாக' என்பதும் ஈறு கெட்டுநின்றன. 'அடையும்' என்பது 'கொள்வார்' என்னும் பலர்பால் படர்க்கைப் பெயர்ச்சொற்குப் பயனிலையாக நின்றது. "கொள்வர்' எனவும் பாடம். (௯)

௪௯ பேராப் பெருநிலன் சேய்த்தே யுடம்பொன்றா
பேரா வொருநிலனா நீங்காப் பெரும்பொருளை
யேரா வறிந்துய்யும் போழ்து.

அநுவயம் :—உடம்பை ஒன்றாது, பேரா ஒரு நில னாக, நீங்காப் பெரும் பொருளை ஏராக அறிந்து உய்யும் போழ்து பேராப் பெருநிலன் சேய்த்தே ?

பதவுரை :—உடம்பு ஒன்றாது - உடம்பைப் பொரு ந்தாது, பேரா ஒரு நிலனா - மாறாத ஒப்பற்ற உலகமாக நின்று, நீங்கா பெரு பொருளை-(அவ்வுலகினின்று) நீங் காத பெரிய பரம்பொருளை, ஏராக அறிந்து உய்யும் போழ்து - நன்றாக அறிந்து பிழைக்கும் பொழுது, பேரா பெரு நிலன் சேய்த்தே - எப்பொழுதும் மாறாத பெரிய முத்திநிலம் தூரத்தின்கண்ணதோ ?

பொழிப்புரை:—உடம்பைப் பொருந்தாது, மாறாத ஒப்பற்ற உலகமாக நின்று, அதினின்று நீங்காத பெரிய பரம்பொருளை நன்றாக அறிந்து பிழைக்கும்பொழுது, எப்பொழுதும் மாறாத பெரிய முத்திநிலம் தூரத்தின் கண்ணதோ ?

கருத்துரை :—மெய்ப்பொருளை யுணர்ந்தார் விரைவில் வீட்டை அடைவர்.

விசேடவுரை :—" ஐயத்தின் நீங்கித் தெளிந்தார்க்கு வையத்தின், வானம் நணிய துடைத்து " என்றார் பொய்யாமொழியார். ஈண்டு இடஅணிமை காலஅணிமையைக் குறித்து நின்றது. 'ஒன்றூது', 'ஏராக' என்பன ஈறுகெட்டு நின்றன. இச்செய்யுள் மூன்றடியால் வந்தமையால் சிந்தியல்வெண்பா. (௪)

௪௪. மெய்யுணர்வே மற்றதனைக் கொள்ள விழுக்கலனும்
பொய்யுணர்வா னீண்டிய வெல்லா மொருங்கழியு
மையுணர்வா னாய்ந்து வறஞ்சார்பாச் சார்பொறுக்க
நையா நிலைவேண்டு வார்.

அநுவயம் :—அதனைக் கொள்ள மெய்யுணர்வே விழுக்கலனும்; பொய்யுணர்வான் ஈண்டிய வெல்லாம் ஒருங்கு அழியும்; நையா நிலை வேண்டுவார் ஐயுணர்வானை ஆய்ந்து அறம் சார்பாகச் சார்பை ஒறுக்க.

பதவுரை :—அதனைக் கொள்ள - அந்நிலத்தை அடைதற்கு, மெய் உணர்வே விழு கலனும் - மெய்ப்பொருள் உணர்ச்சியே மேலான புணையாம்; பொய்யுணர்வான் ஈண்டிய எல்லாம் ஒருங்கு அழியும் - பொய்ப்பொருள் உணர்ச்சியால் பெருகியன வெல்லாம் சேர அழிந்து போம்; நையா நிலை வேண்டுவார் - அழியாத முத்தி நிலையை அடைய விரும்புவோர், ஐ உணர்வான் ஆய்ந்து - ஐவகை உணர்வாக நிற்பானை ஆராய்ந்து, அறம் சார்பாக-

அறத்தைத் துணையாகக் கொண்டு, சார்பு ஒறுக்க - பற்றுக்களை எல்லாம் ஒழிக்கக்கடவர்.

பொழிப்புரை :—அந்நிலத்தை அடைதற்கு மெய்ப்பொருள் உணர்ச்சியே மேலான புணையாம்; பொய்ப்பொருள் உணர்ச்சியால் பெருகியன வெல்லாம் சேர அழிந்துபோம்; அழியாத முத்திநிலையை அடைய விரும்புவோர், ஐவகை உணர்வாக நிற்பானை ஆராய்ந்து, அறத்தைத் துணையாகக் கொண்டு பற்றுக்களையெல்லாம் ஒழிக்கக்கடவர்.

கருத்துரை:—வீட்டையடைய விரும்புவோர் மெய்ப்பொருளை உணர்ந்து அறத்தைப் புரிந்து துறவினையடைக.

விசேடவுரை :—பிறவிக்கடலைக் கடந்து வீட்டு நிலத்தை அடைதற்கு மெய்யுணர்வே சிறந்த புணையென்பது, "உணர்வெனும் வங்கமேறும் அறிஞர் அகல்வர்" என்னும் சசிவர்ண போதத்தாலும், வீட்டினை அடைய விரும்புவோர் பற்றுக்களை அறுக்கவேண்டு மென்பது, "பற்றற்ற கண்ணே பிறப்பறுக்கும் மற்று, நிலையாமை காணப் படும்" என்னும் திருக்குறளாலும் "அற்றது பற்றெனில் உற்றது வீடுயிர், செற்றது மன்னுறில் அற்றிறை பற்றே" என்னும் திருவாய்மொழியாலும் விளங்கும். குற்றியலுகரத்திற்குப் பின்வந்த 'அறம்' என்பதன் முதல் வகரவுடம்படுமெய் பெற்றது. 'மற்று' என்பது அசை. 'விழுங்கலனும்' என்றும் பாடம். (நி)

சரு. ஒன்றுண்டே மற்றுடலிற் பற்றி வினையிறுக்கும்
பொன்ற வுணர்வால் விலங்கொறுக்கப் பைம்மறியாத்
தன்பாற் பெயர்க்குந்து பற்றித் தலைப்பட்டோர்
நன்பா லறிந்தார் துறந்தார் வரலுய்ந்தார்
புன்பாலாற் சுற்றப் படார்.

அநுவயம் :—ஒன்று உண்டே; மற்று உடலிற பற்றி வினையால் இறுக்கும்; பொன்ற உணர்வால் விலங்கு ஒறுக்கப் பைம்மறியா தன்பால் பெயர்க்குந்து; (அதனைப்) பற்றித் தலைப்பட்டோர் நன்பால் அறிந்தார், துறந்தார், வரல் உய்ந்தார்; புன்பாலால் சுற்றப்படார்.

பதவுரை :—ஒன்று உண்டே - ஆன்மா ஒன்று உண்டே; மற்று உடலிற் பற்றி வினை இறுக்கும் - அது உடலிற் பொருந்தி இரு வினைகளாலும் (தன்னை) இறுக்கிக்கட்டும்; பொன்ற உணர்வால்-அழியாத மெய்யுணர்வால், விலங்கு ஒறுக்க - அவ்வினை விலங்கை ஒழிப்பதற்காக, பைம்மறியா தன்பால் பெயர்க்குந்து- உடம்பின் உட்பக்கத்தைத் திருப்பிப்பார்த்துத் தன் உடம்பின் பற்றை ஒழிக்கும்; பற்றி தலைப்பட்டோர் - அம்மெய்யுணர்வைப் பற்றி யடைந்தோர், நன்பால் அறிந்தார்-அறப்பகுதியை அறிந்தவராய், துறந்தார்-எல்லாப் பொருள்களையும் துறந்தவராய், வரல் உய்ந்தார்-இவ்வுலகிற்கு வருதலினின்று தப்பினார்; புன்பாலால் சுற்றப்படார்-பின்னர் (ஒருபோதும்) இழிந்த பகுதிகளால் சூழப்படார்.

பொழிப்புரை :—ஆன்மா ஒன்று உண்டே ; அந்த உடலிற் பொருந்தி இருவினைகளாலும் இறுக்கிக்கட்டும்; அழியாத மெய்யுணர்வால் அவ்வினை விலங்கை ஒழிப்ப தற்காக உடம்பின் உட்பக்கத்தைத் திருப்பிப் பார்த்துத் தன் உடம்பின்பற்றை ஒழிக்கும்; அம்மெய் யுணர்வைப் பற்றி யடைந்தோர் அறப்பகுதியை அறிந்தவராய், எல்லாப் பொருள்களையும் துறந்தவராய், இவ்வுலகிற்கு வருதலினின்று தப்பினர்; பின்னர் (ஒரு போதும்) இழிந்த பகுதிகளால் சூழப்படார்.

கருத்துரை :—ஆன்மாவானது ஓர் உடலைப்பற்றி வினைகளைச் செய்து துன்பங்களை வருத்திக்கொள்ளும்; அது மெய்ப்பொருளை யுணர்ந்தபோது அறத்தைப் புரிந்து துறவை யடைந்து முத்தியை அடையும்.

விசேடவுரை :—மெய்ப்பொருளை யுணர்ந்தோர் பின்னர்ப் பிறப்பினையடையா ரென்பது, "ஓர்த்துள்ளம் உள்ள துணரின் ஒருதலையாப், பேர்த்துள்ள வேண்டா பிறப்பு" என்னும் திருக்குறளால் விளங்கும். ஏகாரம் தேற்றத்தின்கண் வந்தது. 'உம்' 'உந்தா'கிப் 'பெய ர்க்குந்து' என நின்றது. 'இழிந்த பகுதிகள்-காமம், வெகுளி, மயக்கம். 'பொன்ற வுணர்வா' என்றும் 'வரனுய்ந்தார்' என்றும் பாடம். (௪௭)

துறவியல் முற்றிற்று.

வீட்டிலக்கப்பால் முற்றிற்று.

இன்னிலை மூலமும் உரையும் முற்றுப்பெற்றன.

# இன்னிலை

## அரும்பத அகராதி

| பதம் | பொருள் | செய்யுள் |
|---|---|---|
| அண்ணாநிலை | முத்திநிலை | ௪௧ |
| அண்ணாமை | பொருந்தாமை | ௫௧ |
| அம்மை | முற்பிறப்பு | ௯ |
| அளகு | சேவல் | ௫௧ |
| இட்டல் | சுருங்குதல் | ௫௪ |
| இறுக்கல் | இறுக்கிக்கட்டல் | ௪௫ |
| ஈர்க்கல் | இழுத்தல் | ௰௧ |
| ஈர்த்தல் | கடிதல் | ௪௧ |
| உயர்புலம் | மோக்ஷம் | ௨௰ |
| உழண்டை | துன்பம் | ௯ |
| ஊங்கு | சிறந்தது | ௰ |
| ஊழ்த்தல் | சொரிதல் | ௬ |
| | சிறத்தல் | ௫௫ |
| ஏம்புதல் | களித்தல் | ௰௮ |
| ஒட்டு | ஒப்பு | ௰௬ |
| ஒண்மை | அறிவு | ௫௬ |
| ஒல்கல் | தளர்தல் | ௰௪ |
| கட்டளை | உரைகல் | ௰௬ |
| கதுப்பு | மூடுவேர் | ௭ |
| கந்தழி | கடவுள் | ௫௰ |
| கழுது | பேய் | ௧ |
| களைகண் | ஆதரவு | ௫௭ |
| காற்றொழில் | முயற்சி | ௫௯ |
| சென்னிலை | செல்வாக்கு | ௰௪ |
| சொல்லாட்டு | சொல்லுதல் | ௮ |
| ஞாங்கர் | அடிப்பக்கம் | ௭ |
| தட்டம் | பரிசம் | ௯ |
| தணத்தல் | நீக்குதல் | ௪ |
| தண்டா | கெடாத | ௭ |
| தண்ணீர் | அருள் | ௰௫ |
| தளியாளர் | சாப்பாட்டுப்பிரியர் | ௫௧ |
| திரங்கல் | மெலிதல் | ௰௪ |

| | | |
|---|---|---|
| திருவத்தர் | செல்வமுடையோர் | சு |
| திரைத்த | சுருண்டவை | ரு |
| துப்பார் | துணைவர் | உஉ |
| தோல் | அழகு | உ௩ |
| நயன் | நீதி | ௩அ |
| நாகு | பெட்டை | ௩க |
| நாப்பண் | சுவர்க்கம் | உ௰ |
| நாரம் | ஈரம் | ௩௩ |
| பட்டாங்கு | மெய்ம்மை | ௰௬ |
| பரிவு | துன்பம் | ௩எ |
| பழிச்சல் | துதித்தல் | ௰௬ |
| பாலி | ஆலமரம் | ௩ |
| பாலை | பிரிவு | உ௩ |
| பிறக்கு | பின்பக்கம் | ௩க |
| புண் | துன்பம் | ௪௩ |
| பூப்பு | பொலிவு | உ௪ |
| பூயல் | பொருந்துதல் | அ |
| போவாய | செலவுகள் | ௩சு |
| மடி | வயிறு-பிறப்பு | அ |
| மடுத்தல் | அநுபவித்தல் | ௰சு |
| மிசையார் | அநுபவியாதார்—இல்லாதார் | உ௬ |
| முன்னல் | நினைத்தல | ௰ |
| மூசா | அழியாத | ௪உ |
| மேற்பால் | மோக்ஷம் | உ |
| மையா | காட்டுப்பசு | ௰௬ |
| மோத்தை | ஆட்டுக்கடா | ௰ |
| யாணர் | புதிது | உரு |
| வட்டல் | திரட்டுதல் | ௩௪ |
| விழுப்புலன் | அறிவு | ௪க |
| வீறுதல் | ஓங்குதல் | ௪உ |
| வெண்ணீர் | வெண்மை—அறிவின்மை | ௰௩ |
| வெளி | பரவெளி—சிதாகாயம் | ௪௰ |
| வெறுக்கை | செல்வம்; வெறுப்பு. | ௰௬ |

அரும்பத அகராதி முற்றிற்று.

# இன்னிலை

## உரை மேற்கோள் அகராதி.

# உரை மேற்கோள் அகராதி

உரை மேற்கோள் அகராதி முற்றிற்று.



PRINTED AT THE INDIA PRINTING WORKS, MADRAS.